Madras University Tamil Series, No. 6

5

# NĀNĀRTHA-DĪPIKAI

## (A TAMIL LEXICON OF HOMONYMS)

BY

*KAVIRAJA* MUTTUSWAMI PILLAI

OF TINNEVELLY

EDITED WITH NOTES BY

S. ANAVARATAVINAYAKAM PILLAI, M.A., L.T.,

*Reader in Tamil, Oriental Research Institute,*

*University of Madras*




UNIVERSITY OF MADRAS

1936

[Price: Rs. 6.

# நாநார்த்த தீபிகை

திருநெல்வேலி

கவிராயர் முத்துசுவாமி பிள்ளையவர்கள்

இயற்றியது

சென்னைச் சர்வகலாசாலை

தமிழாராய்ச்சித்துறைத் தலைவர்

சு. அனவரதவிநாயகம் பிள்ளை, M. A., L. T.

உரையெழுதிப்

பதிப்பித்தது

சென்னைச் சர்வகலாசாலை

சென்னை

1936

[விலை ரூபா 6

# உள்ளுறை

# FOREWORD

No language can be truly mastered without a grammar and a dictionary. Grammar was systematised in Tamil long ago and many good treatises on the subject were written, although a modern Tamil grammar is yet a desideratum. Not so with dictionary which is of greater use to a student of language. Dictionaries there are in Tamil, but a comprehensive dictionary prepared on scientific lines is possible only after a thorough examination of all the sources relating to matter, literary as well as lexical. Though there are a good number of metrical lexicons written in Tamil, only a few have been published so far. It is necessary that all of them must be made available to scholars who are engaged in linguistic studies, and especially the section on homonyms which treats purely of lexical matter. The present work *Nānārtha-dīpikai* is one of the very important nighaṇṭus of this class, and, as such, it is published in the hope that it will be a useful addition to the existing works on the subject.

The *Nānārtha-dīpikai,* a metrical lexicon dealing with homonyms alone, was written about 80 years ago. There were no doubt many Tamil lexicons before this, some similar to the one now published, dealing with homonyms alone. But there was none which contained the special features observable in this work. This work while appearing to follow the plan of the eleventh section of the *Cūḍāmaṇi-nighaṇṭu,* a very popular metrical lexicon, is an improvement on it in some respects. While the *Cūḍāmaṇi-nighaṇṭu* contains 309 stanzas with 1,575 main words, this contains 1,102 stanzas with 5,452 main words, more than thrice that number. Although rhyme is made the basis of classification in both, in the *Cūḍāmaṇi-nighaṇṭu* some rhyme-sections contain words that do not legitimately belong to them, which defect is avoided in this work. Again, unnecessary adjuncts which often obscure the meaning in other nighaṇṭus are scrupulously eschewed in this; Sanskritic words seem to form the bulk of homonyms dealt with.

The author was Kavirāja Muttusvāmi Piḷḷai, a native of Tinnevelly. It is said he was a munshi to European missionaries, Bishop Sargent among others. He was a great Tamil scholar well versed in Sanskrit and Telugu. Of his Sanskrit knowledge the present work bears ample evidence. This was not his only work, but this is the only one that could be secured. Even of this, the author's manuscript or the manuscript of his son-in-law Mr Svāminātha Piḷḷai, also a scholar, who wrote an Introduction in verse to this work and who is said to have attempted to write a commentary, could not be obtained, but only a bare text which was copied from the previous manuscript by the son of the latter, Mr Sōmasundaram Piḷḷai. In editing this work it was found that many stanzas presented difficulties which could be got over only by a reference to a number of Sanskrit lexicons. To make the work really useful a clear commentary with references to Sanskrit lexicons and Tamil nighaṇṭus had to be prepared. It is not, however, suggested that the author had before him all the books quoted or referred to when he wrote the work, but it is believed that the quotations and references justify the interpretations where the stanzas are obscure or ambiguous.

The editor is indebted to Dr T. R. Chintāmaṇi, Senior Lecturer in Sanskrit, Oriental Research Institute, for the readiness with which he looked over the Sanskritic portion of the notes and offered very valuable suggestions, and to Mr S. Vaiyāpuri Piḷḷai, Editor of the Tamil Lexicon, University of Madras, for kindly looking over the proofs and making many suggestions which were calculated to improve the work.

S. ANAVARATAVINAYAKAM PILLAI.

# முன்னுரை

தமிழிலக்கியங்களை யுணர்தற்குக் கருவியாயிருக்கும் நூல்கள் நிகண்டு, இலக்கணம், தருக்கம் முதலாகப் பலதிறப்படும். அவற்றுள் நிகண்டு இலக்கியங்களிற் காணுஞ் சொற்களின் அர்த்தத்தை வரையறுத்தற் கின்றியமையாதது. சொல்லர்த்தத்தைத் தெளிவுபடுத்தும் அகராதிக்கு மூல நூல்களுள் முக்கியமானவையாகிய நிகண்டுகளில் பொருள்களின் பெயர்களைக் கூறும் பல பகுதிகளும், ஒருசொற் பல பொருளைக் கூறும் ஒரு பகுதியும் சாதாரணமாகக் காணப்படும். பொருள்களின் பெயர்களை யுரைக்கும் பல பகுதிகளைக் காட்டிலும் ஒருசொற் பலபொரு ளுரைக்கும் பகுதியையே மாணவர் நெட்டுருப்பண்ணுதல் நெடுநாள் வழக்கமாயிருக்கிறது. **சூடாமணிநிகண்டு** பதினொராவது தொகுதியைப் பாடம்பண்ணும் வழக்கம் தமிழ்ப்பாடசாலைகளில் இன்றும் உளது. கி. பி. 1843-ல் **நிகண்டு** என்னும் ஒருசொற் பலபொருட் டொகுதியைப் பிரசித்தம்பண்ண முன்வந்த யாழ்ப்பாணத்துப் புத்தக சங்கத்தாரும் **சூடாமணிநிகண்டு** பதினொராவது தொகுதியைச் சென்னைப் புலவர்சிகாமணி வேதகிரி முதலியார் இயற்றிய சில செய்யுட்களையுஞ் சேர்த்து விரித்துப் பிரசித்தம்பண்ணினர்.

நிகண்டுகளுட் பழமையானது **திவாகரம்**. அதில் ஒருசொற் பல பொருளுரைக்கும் பதினொராவது பல்பொருட் பெயர்த்தொகுதி 377 சொற்களுக்குப் பொருளுரைத்தது. அது ஆதியிற்பொருள் அந்தத்துப் பொருள் என இரண்டு பிரிவுகளையுடையது. **பிங்கலந்தை**யிற் பத்தாவது ஒருசொற் பல்பொருள் வகை 1091 சொற்களின் பொருள்களை யுரைத்தது. **சூடாமணிநிகண்டு** ஒருசொற் பல்பொருட் பெயர்த்தொகுதி ககரவெதுகை முதல் னகரவெதுகை யீறாகப் பதினெட்டு எதுகைகளையுடைய சொற்களை 310 விருத்தங்களாற் கூறியது; அதிற் காணும் சொற்கள் 1575. **உரிச்சொனிகண்டி**ல் பதினொராவது ஒருசொற் பல்பொருட் பெயர்த்தொகுதி 36 வெண்பாக்களையுடையது; அதில் 151 சொற்களின் பொருள்கள் உரைக்கப்பட்டன.

இவற்றின் பின் ஒருசொற் பல்பொருள் மாத்திரங் கூறும் நிகண்டுகளும் பல தோன்றின. கி. பி. 1594-ல் சிதம்பர ரேவண சித்தர் இயற்றிய **அகராதிநிகண்டு** 3368 சொற்களின் பொருள்களை அகராதிக் கிரமமாக உரைத்தது. அருமருந்தைய தேசிகர் இயற்றிய **அரும்பொருள்விளக்கநிகண்டி**ல் 700 விருத்தங்கள் உள்ளன; அதிற் காணும் சொற்கள் 3200. சுமார் கி. பி. 1780-ல் கல்லிடைக்குறிச்சி சுவாமிநாத கவிராயர் இயற்றிய **பொதிகைநிகண்டு** முதற் பகுதியில் பத்தாவது ஒருசொற் பல்பொருட்

பெயர்த்தொகுதி எதுகை முறையைப்பற்றி 140 விருத்தங்களில் ஒரு சொற் பல்பொருள் உரைத்தது; இரண்டாம் பகுதி அகராதி முறையைப் பற்றி 2228 சொற்களின் பொருள்களை உரைத்தது. முன் குறிக்கப்பட்ட **நிகண்டி**ல் 583 விருத்தங்கள் உள்ளன; அதிற் காணுஞ் சொற்கள் 2526. **சூடாமணிநிகண்டு** பதினோராவது தொகுதியின் முறையைப் பின்பற்றி எதுகைக்கிரமத்தில் அமைக்கப்பட்ட நிகண்டு **நாநார்த்ததீபிகை**; 1102 விருத்தங்களா னியன்ற இந்நூல் முழுதும் ஒருசொற் பல்பொரு ளுரைப் பதே; இதிற் பொருளுரைக்கப்பட்ட சொற்கள் 5452. தமது நூலின் சிறப்பியல்புகளை ஆசிரியர் தற்சிறப்புப்பாயிரத்தில் 'ககராதி னகரவீ றெதுகை வைத்து அதிற் கலப்பு உறாது அடைவே பொருள் பெற எழுத்தின் முறையில் நாநார்த்ததீபிகை யென இது புகல்வாம்' என்றும், 'அடி ஒன்றில் இரண்டும் ஒன்றுமாக ஓர் தொடையிற் செய்யுள் முடிய ஓர் சொல் நாநார்த்தம் முறைதர மொழிகின்றேன்' என்றும், 'புகல்வன் வடநூற்சொற் செந்தமிழினும் பொருள்தொடுத்துச் செயும் நாநார்த்த தீபிகையே' என்றும், 'அடைசொற்கு அஞ்சிப் பற்பல விருத்தத்தாலும் பகர்ந்த' என்றும் குறிப்பிட்டார். **சூடாமணிநிகண்டு** சொற்களை எதுகை முறையில் உரைத்ததுபோலவே இதுவும் உரைப்பினும் இதில் எதுகைக் கலப்பில்லை. இவ்வெதுகைக் கலப்பின்மை **நிகண்டி**னும் காணப்படு கின்றது. மற்று, அடைசொற்களை நீக்கியிருத்தல் இதிற் சிறப்பாகக் காணப்படுவது. வடசொற்களின் விளக்கம் இந் நிகண்டிற்போல விரிவாக வேறெந்த நிகண்டினும் இல்லை யென்னலாம். இன்னும், **சூடாமணிநிகண்டு**, **நிகண்டு**களில் நூல் முழுதும் ஒருவகை விருத்தத்தா லமைந்திருத்தல் போலன்றி இதில் எல்லாவகை விருத்தங்களும் காணப்படுகின்றன. ஆசிரி யர் தமக்கு ஆதாரமான நூல்களை 'முன்னோர் பன்னூலிற் சில வெவ்வேறு உரைத்தவெல்லாஞ் சேர்த்து ஒன்றுத் திரட்டி' யெனப் பொதுவகையாற் கூறினரேயன்றித் **திவாகரம்**, **பிங்கலந்தை**, **சூடாமணிநிகண்டு** முதலாகப் பெயராற் கூறினாரல்லர்.

நூலாசிரியர் கவிராயர் முத்துசாமி பிள்ளையவர்கள் பழனிக்கடுத்த உடுமலைப்பேட்டையிலிருந்து திருநெல்வேலிப் பாவூரில் வந்து குடியேறிய ஓர் சைவ வேளாள குடும்பத்திற் பிறந்தவர். பழனிபோலவே இப் பாவூர்க் குச் சிறிது தூரத்தில் கந்தன் கோயிலையுடைய ஒரு சிறு மலை உளது. ஆசிரியர் 'கந்தன் பழனிப்பதிக் குமரன் கருணைபெறு செண்பகக்கவிஞன் மைந்தன் எழுதாயுதப் பெருமானெனும் நாவலர்கோன் வரமதனால் வந்த அடியேன்' என்று கூறித் தம் தந்தையும் பிதாமகரும் இன்னின்னா ரென உரைத்தார். இந்நூற்பதிப்பாசிரியர்க்குப் பிதாமகரின் தமையனாராகிய ஆசிரியரைப்பற்றிக் கேள்வியா லறிந்த சிலச்சில குறிப்புக்களை இங்கு

எழுதப்படுகின்றன. ஆசிரியரின் முன்னோர்கள் கந்தக்கடவுளை நன்கு உபாசித்தவர்கள். அக் குடும்பத்தில் ஒரு பிதாவுக்கு ஒரு பிள்ளையே பிறப்பது வழக்கமாயிருந்தது. அப் பிள்ளையும் சிறுவயதிலேயே பழனிப்பதிக் கந்தன் சந்நிதியிற் சார்ந்தவுடனே கவியியற்றும் வன்மை வாய்ந்து கவியியற்றத் தொடங்கியதனால் அக் குடும்பத்தினர் பாம்பரையாகக் கவிராயரென வழங்கப்பட்டனர். ஆசிரியர் பிதா எழுதாயுதம் பிள்ளை ஒரு பிள்ளையோடு திருப்தியடையாது பல பிள்ளைகள் வேண்டுமென்று விரும்பி அங்ஙனமே வரம்பெற்றார். கவிராயரென்ற பெயரும் ஆசிரியர்க்குப் பின் அக் குடும்பத்தின ரெவர்க்கும் வழங்கியதாகத் தெரியவில்லை. இந்நாள் திருநெல்வேலியில் பலவூர்களினும் அவர் சந்ததியினர் இருக்கின்றனர். இனி ஆசிரியர் இளமையிற் பாவூரில் வசித்தவர். பின் திருநெல்வேலியில் வந்திருந்து பிஷப் ஸார்ஜன்ற் உள்ளிட்ட பல ஐரோப்பிய பாதிரிமார்க்கும் உத்தியோகஸ்தர்க்கும் தமிழறிவுறுத்திவந்தார். திருக்குற்றாலத்திற்கடுத்த மேலகரத்திற் பிறந்து வளர்ந்து பின் திருவாவடுதுறையில் மஹாஸந்நிதானமாய் விளங்கிய ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக மூர்த்திகளுக்கு இளமையிற் பாடஞ் சொல்லினரென்றுந் தெரிகிறது. இவர் தமிழ் நன்கு கற்றதோடமையாமல் ஸம்ஸ்க்ருதம் தெலுங்கு உருது முதலிய வேறு மொழிகளும் கற்றிருந்ததாகத் தெரிகிறது. ஸம்ஸ்க்ருதத்தில் பாண்டித்தியம் பெற்றிருந்தார் என்பதற்கு **நாநார்த்ததீபிகை** யொன்றே சான்று பகரும். மற்று, அவர் செய்ததாகச் சொல்லும் தமிழ் ஸம்ஸ்க்ருத தெலுங்கு அகராதிகளெல்லாம் செல்வாய்ப்பட்டொழிந்தன போலும். இந்நூற்குச் சிறப்புப்பாயிரஞ் சாற்றியவர் ஆசிரியரின் மருகரும் மகளை மணந்தவருமான தமிழறிஞர் சுவாமிநாத பிள்ளையவர்கள். இவர் இந்நூலுக்கு உரை யெழுதத் தொடங்கினரென்றும் அது பூர்த்தியுறவில்லை யென்றும் கேள்வி. இவர் புத்திரர் தமிழறிஞர் சோமசுந்தரம் பிள்ளையவர்கள் கையால் எழுதிய காகிதப் பிரதியே இப் பதிப்பிற்கு ஆதாரமாயிற்று. ஆசிரியர் கைப்பட எழுதிய ஓலைச் சுவடியாயினும் காகிதச் சுவடியாயினும் அகப்படவில்லை.

இந் நிகண்டைக் கண்ணுற் கண்டிலராயினும் ஆசிரியர் குலத்தினரெல்லாம் அதனை அருமையாக மதித்துவந்தனர். அதனைத் தத்தம் குடும்பத்துச் சிறாரை ஓதியுணரச் செய்யவேண்டுமென்னும் அவா அவரனைவர்க்கும் இருந்ததென்றே சொல்லலாம். ஆயினும் நூற்பிரதி தமிழறிஞர் சோமசுந்தரம் பிள்ளையவர்கள் வசமேயிருந்தது. அதற்கு உரையெழுத வேண்டுமென்றே அவர் வடமொழியை ஊக்கமாகக் கற்றனர். பல காரணங்களால் அவர் கருத்து நிறைவேறாது போயிற்று. இதற்கு எளிதாக ஓர் உரை யியற்றி இதனைப் பதிப்பிக்கலாம் என்னும் நோக்கத்தோடு பதிப்பா

சிரியர் இதனை யாராய்ந்து பதவுரையும் இயற்றியபின் சில ஐயங்களை யொழித்துக்கொள்ளும்பொருட்டுத் தமிழ்ப் பழ நிகண்டுகளையும் சில ஸம்ஸ்க்ருத கோசங்களையும் ஆராயவேண்டியிருந்தது. "மேற்கோள் நூல்கள்" என்னுந் தலைப்பின்கீழ்ப் பின் காணும் தமிழ்நூல்கள் வடநூல்களனைத்தும் ஆராய்ந்த பின்னரே இந் நிகண்டின் செய்யுட் பொருள்கள் நன்கு விளங்கின. அங்ஙனம் ஆராய்ந்தும் பொருளுக்காதாரங் காணப்படாத சொற்கள் உண்டு. உரையில் அவ்விடங்களில் பொருள் எண்கள் ஆதாரமின்றி வெறுமையாக விடப்பட்டன. சொற் பொருள்களுக்குத் தமிழ்நூல்களிலிருந்தும் வடநூல்களிலிருந்தும் ஆதாரங் காட்டுதலால் அவ்வாதாரங்களைக்கொண்டே ஆசிரியர் நூலியற்றினரென்பது பதிப்பாசிரியர் கருத்தன்று. பொருள்களின்கண் ஐயந் தீர்த்துக்கொள்ளற்காக ஆராயப்பட்ட நூல்களில் பொருள்கள் ஆங்காங்கே கண்டவிடத்து அங்ஙனமே காட்டியதாம். ஆயினும் ஆசிரியர் இந்நூலைப் பூர்த்தி செய்யாது சிறிது குறையாய் விட்டிருந்தனரோ என்றாகித்தற்கு நியாயஞ் சிலவுண்டு. 149-வது செய்யுளிற் பொருட்பிறழ்ச்சியும், 229, 382-வது செய்யுள்கள் பொருட் டெளிவின்றி யிருப்பதும், 159-வது செய்யுளில் ஒரு சொல் ஒரு பொருளோ டிருத்தலும், அவரம் ஏட்டை கடமை காயல் கிரந்தம் சீவநி நேயம் பிரதேசம் மைதுநம் என்னுஞ் சொற்கள் இரண்டு இடங்களில் பொருளுரைக்கப்பட்டிருத்தலும் ஆசிரியர்க்குத் தாமியற்றிய செய்யுள்களை மீண்டும் நோக்கித் திருத்துதற்கு அவகாசமில்லாது போயிற்றோ என்றும், செய்யுள்களிற் சில ஆசிரியர் வைத்துப்போன குறிப்புக்களைக் கொண்டு பிறர் இயற்றியனவோ என்றும் சங்கையுறச் செய்யும்.

முக்கிய நிகண்டுகளுக்கெல்லாம் காலத்தால் பிற்பட்ட நாநார்த்த தீபிகை தோன்றி எண்பது ஆண்டுகட்குமே லாகவில்லையாயினும் இந்நூல் இன்ன ஆண்டில் இயற்றி முடிந்தது என்று வரையறுத்துக் கூற வியலாமை வருந்தத்தக்கது. நூலாசிரியர் ஆண்டை யாண்டுங் குறித்திலர்; சிறப்புப்பாயிரமும் காலங் குறித்திலது.

சென்னைச் சர்வகலாசாலை
6—7—1936

சு. அனவரதவிநாயகம் பிள்ளை

## சங்கேத மொழிகள்

உலக வழக்கிலுள்ள சொற்கள் வழக்கு, வழக்., என்று காட்டப்பட்டுள்ளன.

வடமொழிக் கோசங்கள் பொதுவாகக் கோசம் என்று குறிக்கப்பட்டன.

இலக்கண நூல் - தமிழ் இலக்கண நூல்.

சைவாகமவழக்கு, சைவசாஸ்திர வழக்கு, சைவநூல் வழக்கு: இவை சைவ சம்பிரதாயச் சொற்களைக் குறிக்கும்.

## உரையிற் காட்டிய மேற்கோள் நூல்கள்

[தமிழ்]

**நிகண்டுகள்:**

அகராதிநிகண்டு—மதுரை, 1921. [அக. நி. பக்க எண்.]

அரும்பொருள்விளக்கநிகண்டு — மதுரை, 1931. [அ. வி. நி. செய்யுள் எண்.]

உரிச்சொனிகண்டு — ரிப்பன் அச்சியந்திரசாலை, சென்னை, 1914. [உரி. நி. தொகுதி எண், செய்யுள் எண்.]

சூடாமணி நிகண்டு, சுவாமிநாத பண்டிதர் பதிப்பு—சென்னை, 1909. [சூடா. பத்துத் தொகுதி — தொகுதி எண், செய்யுள் எண். பதினொராந்தொகுதி—தொகுதி எண், எதுகை எழுத்து, செய்யுள் எண். பன்னிரண்டாந் தொகுதி—தொகுதி எண், செய்யுள் எண்.]

திவாகரம்—சென்னை, ஆண்டு குறியாதது. [திவா. தொகுதி எண், சூத்திர எண்.]

நாமதீபநிகண்டு—சென்னை, 1930. [நா. தீ. நி. செய்யுள் எண்.]

நிகண்டு, ஒருசொற் பலபொருட் டொகுதி — யாழ்ப்பாணம், 1843. [நிக. செய்யுள் எண்.]

பிங்கலநிகண்டு—ரிப்பன் அச்சியந்திரசாலை, சென்னை, 1917. [பிங். தொகுதி எண், சூத்திர எண்.]

பொதிகைநிகண்டு — சென்னை, 1934. [பொ. நி. இரண்டாம் பகுதி மாத்திரம். சூத்திர எண்.]

**அகராதிகள்:** [அக.]

தமிழ்மொழியகராதி — சென்னை, 1911.

Tamil Lexicon. Pub. by the University of Madras. சென்னை, 1924—1936.

**இலக்கண நூல்கள்:**

இலக்கண விளக்கம் [இலக்கணவி.]

தண்டியலங்காரம் [தண்டி., தண்டிய.]

தொல்காப்பியம், எழுத்து [தொல். எழுத்.]

,, சொல் [தொல். சொல்.]

,, பொருள் [தொல். பொ.; தொ. பொ.]

நன்னூல் [நன்.]

பன்னிருபாட்டியல்

புறப்பொருள்வெண்பாமாலை [பு. வெ.]

யாப்பருங்கலக் காரிகை [காரிகை]

யாப்பருங்கலம்

வச்சணந்திமாலை.

**இலக்கிய நூல்கள்:**

கம்பராமாயணம்

சிலப்பதிகாரம்

திருக்குறள், பரிமேலழகருரை [குறள்]

திருமுருகாற்றுப்படை

நளவெண்பா

முல்லைப்பாட்டு.

[ஸம்ஸ்கிருதம்]

## கோசங்கள்:

### கிரந்த லிபி:

அமரகோச: த்ராவிடடீகயா ஸஹ—சென்னை, 1889. [அ. கோ. தமிழுரை.]

நாநார்த்தரத்னமாலா, மூலம்—சென்னை, 1879. [நா. ர.]

### தெலுங்கு லிபி:

நாநார்த்தரத்னமாலா ஸடீகம் — சென்னை, 1924. [நா. ர. ஏகாக்ஷரகாண்டம் முதலியன, i, ii, iii, iv, ஸங்கீர்ண (காண்டம்), அவ்யய (காண்டம்). ச்லோக எண்.]

வைஜயந்தீகோசம் ஸடீகம்—சென்னை, 1933. [வை. காண்ட: முதலியன, அ முதலியன. ச்லோக எண்.]

விச்வகோசம் ஸடீகம் — சென்னை, 1931. [வி. ப்ர. (தெ). காண்ட: முதலியன, அ முதலியன. ச்லோக எண்.]

### தேவநாகரி லிபி:

அநேகார்த்தஸங்க்ரஹ: மூலம்— நிர்ணயஸாகர யந்த்ரசாலை, பம்பாய், 1889. [அ. ஸ. நிர்ணயஸாகரப் பதிப்பு.]

அநேகார்த்தஸங்க்ரஹ: with extracts from the commentary of Mahendra, edited by Th. Zachariae, Vienna, 1893. [அ. ஸ. ஏகஸ்வரகாண்ட: முதலியன, i, ii, iii, iv, v, vi, vii. ச்லோக எண். மஹேந்த்ரடீகா உரை, டீகை, மகேந்திரர் டீகை என்று காட்டப்பட்டுளது.]

அமரகோச:, மஹேச்வரடீகா — பம்பாய், 1907. [அ. கோ. காண்டம், I, II, III; வர்க:, i, ii, iii முதலியன; ச்லோக எண்.]

அமரகோச:, வ்யாக்யாஸுதயா—நிர்ணயஸாகர யந்த்ரசாலை, பம்பாய், 1929. [அ. கோ. காண்டம், வர்க:, ச்லோக எண்.]

த்ரிகாண்டசேஷ: வ்யாக்யாஸமேத:— ஸ்ரீ வேங்கடேச்வர யந்த்ரசாலை, பம்பாய், 1916. [த்ரி. சே. காண்டம், வர்க:, ச்லோக எண்.]

நாநார்த்தார்ணவஸம்க்ஷேப: — அநந்தசயநஸம்ஸ்க்ருதக்ரந்தா-வலி:, 23. 1913 முதலிய ஆண்டுகள். [நா. ஸ. ஏகாக்ஷரகாண்ட:, த்வ்யக்ஷரகாண்ட: — i, பக்கம் 1—180, த்ர்யக்ஷரகாண்ட: — ii, பக்கம் 1-226,

த்வ்யக்ஷரகாண்ட:, த்ர்யக்ஷரகாண்ட: — iii, பக்கம் 1-107, பகுதியெண்ணும் பக்க எண்ணும். நூலில் பதங்கள் தடித்த எழுத்தில் காணப்படும்.]

மங்ககோஶ: edited by Theodor Zachariae, Vienna, 1897. மங். கோ. ஶ்லோக எண்.]

மேதினீகோஶ:, இரண்டாம் பதிப்பு—கல்கத்தா, 1897. [மே. காந்தவர்க: முதலியன, க முதலியன. ஶ்லோக எண்.]

விஶ்வப்ரகாஶ: — காசி, 1911. [வி. ப்ர. காந்தவர்க: முதலியன, க முதலியன. ஶ்லோக எண்.]

வைஜயந்தீ, edited by Gustav Oppert — சென்னை, 1893. [வை. பக்கம், வரி.]

ஶாஶ்வதகோஶ:, இரண்டாம் பதிப்பு — புனா, 1929. நாநார்த்தரத்நமாலாகோஶ:, ஏகாக்ஷரகாண்ட: இறுதியிற் காணப்படுகிறது. [ஶா. கோ. ஶ்லோக எண்.]

**அகராதிகள்:** [ஸ. அக.]

The Practical Sanskrit-English Dictionary by Vaman Shivram Apte, M.A. —Poona, 1890.

A Sanskrit-English Dictionary Etymologically and Philologically arranged, with special reference to cognate Indo-European languages by Sir M. Monier - Williams, New edition greatly enlarged and improved by E. Leuman and C. Cappeller and other scholars — Oxford, 1899.

வேறு நூல்கள்:

காவ்யாதர்ஶ:
குவலயாநந்த
தைத்திரீயஸம்ஹிதா
தேவீகாலோத்தர
தந்வந்தரீயநிகண்டு:, ராஜநிகண்டு:
மநுஸ்ம்ருதி:
மஹாபாரத
ஶாண்டில்யோபநிஷத்
ஸம்கீதரத்நாகர:.

நூலாசிரியரின் மருகர்

தமிழறிஞர்

சுவாமிநாத பிள்ளையவர்கள்

இயற்றிய

# சிறப்புப்பாயிரம்

சீர்மருவு பாண்டிவளர் நாட்டினின் மலர்ப்பொழில்
செறிந்திலகு பாகையென்னும்
திவ்யநக ரதிபனுயர் கங்கைகுல திலகன்மிகு
சீர்த்திபெறு சைவரத்நம்
சிறந்திடு குணாகர னறக்கடன் மனர்க்குமுடி
செங்குவளை யணியன்மார்பன்
றிகழ்கின்ற வடகலைக டென்கலைகண் முற்றுமுச்
சிக்கறுத் துளவுதேர்ந்தும்

ஏர்தரு தெலுங்குநா கரமுதல பாடைக
ளனைத்தையும் வரம்புகண்டும்
எல்லையில் லாதகலை வேட்கையு னனந்தைய
ரியற்றிய தவங்கடாமே
யெழில்கொளொரு வடிவுற் றெனப்பொறை தயங்குமெழு
தாயுதப் பெருமான்வரத்
தினிமைதரு மகவெனவு மாகிவளர் முத்துசுவா
மிக்கவி யிராசர்கோமான்

பார்மிசை யிலக்கிய மெனப்பல துறைக்கொடு
பரந்திய னிகண்டுமுதலாப்
பற்பலக ராதிகளை யுந்திரட் டியதினூறு
பதராடைக ணீத்துநன்றும்
பதங்களொடு சிற்சில்வட பதமுஞ் செறித்தழகு
பத்துறு விருத்தவகையாற்
பகர்ந்தருளி நாநார்த்த தீபிகை யெனுஞ்சுவைகொள்
பாடலினை யாவரேனும்

ஓர்தலுற் றிடினூறு மனத்திரு ளிரித்தகல்
வுறும்பொருள் விளக்குசெயலால்
உயர்கலைக ளுக்குரிய பொருள்வகை யெனைத்தையு
முணற்குமு னளித்திடுதலா

னுலகுறு மிலக்கிய மெனுந்திரள்க ளுக்குமுத
லாயுறுதி பெற்றசெயலால்
உதயனென வுஞ்சுரர்க டருவதென வுங்கலைகு
ருளமெனவு மொளிர்கின்றதே. (க)

பற்பலநூல் கற்கினுமென் பாடித் தானென்
பயனிலவே யெழுத்தொடுசொற் பான்மை வந்த
வுற்பவமோர்ந் திலராயி னனைய தன்மைக்
குற்பவித்த முத்துசுவா மிக்க வீந்த்ரன்
அற்புதமாய்ப் பயில்பிரசங் கமதிற் சில்போழ்
தகப்படுபுல் லறிவரையு மாய்ந்த கேள்வி
விற்பனரும் வெல்லரிதென் றுலிந் நூலை
விண்டதவற் கொருவியப்போ விபுலை யீரே. (உ)

புகழ்பெருகு கம்பனொடு மொட்டக் கூத்தன்
புகழேந்தி காளமுகின் முதல்வ ராய
முகமுறுநற் புலவர்கண்முன் மாய்ந்த தோரின்
முற்றவுநன் றிற்றைஞான் றறிஞ வல்லீர்
தகவுளவிம் முத்துசுவா மிக்க வீந்த்ரன்
றன்முனெதிர்ப் பட்டவர்க டன்மை குன்றிப்
பகலவன்முன் மின்மினிபோ லாவா ரிச்சொற்
பயனுளவென் பதற்கவனூல் பகருஞ் சான்றே. (ங)

முன்னிலக் கிசைநூன் முதுவிலக் கியங்கள்
மொழிப்பிறழ் வடைசொலான் முழுதுந்
துன்னிலக் கிதயத் துனிவட கலையாற்
சோதனை கண்டுசுத் தமதாப்
பன்னிலக் கியங்கட் கிலக்கிய மெனவிப்
பதப்பொருள் பகர்ந்தனன் பாகை
தன்னிலக் கினில்வாழ் தருங்கவி முத்து
சுவாமியாந் தமிழ்ப்புர வலனே. (ச)

கம்பனுக்குங் கும்பனுக்குங் காளியொட்டக் கூத்தனுக்கும்
கம்பனுக்கும் வாணி கருத்துருக்கும் - கம்பனுக்குங்
கொண்டனிகர் முத்து சுவாமிகுரு சாமிசெயுந்
தண்டமிழ்ப்ர சங்கமதிற் றன். (ரு)

# நாநார்த்த தீபிகை

## தற்சிறப்புப் பாயிரம்

### பரசிவம்

உலகமோர் மூன்று மேத்த வுயிர்க்குயி ராகி யெங்கு
மிலகிய கடவுள் பாத மிறைஞ்சிமுன் னோர்பன் னூலிற் [ர்சொற்
சிலவெவ்வே றுரைத்த வெல்லாஞ் சேர்த்தொன் றாத் திரட்டி யோ
பலபொரு ளெனுநா னார்த்த தீபிகை பகர லுற்றாம். (க)

சுவர்க்க மத்திய பாதலமென்னும் மூவகை யுலகங்களும் வழிபட உயிரனைத்தினுக்கும் உயிராகி எங்கும் விளங்குகின்ற சிவபெருமானது திருவடிகளைத் தொழுது முன்னோர் பலநூல்களில் வெவ்வேறாக உரைத்த சிலவற்றை யெல்லாம் சேர்த்து ஒன்றாகத் திரட்டி ஓர் சொற் பலபொரு ளென்னும் நானார்த்த தீபிகையைச் சொல்லத் தொடங்கினோம்.

### திரிபுரசுந்தரி

தெரிதர நவினு னார்த்த தீபிகைக் கொருநீங் கின்றி
விரிவெலாஞ் சுருக்க மாக விளம்பிட வேண்டி யன்பாற்
றிரிபுவ னங்க ளீன்றத் தேவர்மூ வரையுந் தந்த
திரிபுர சுந்த ரித்தாய் சேவடி வணக்கஞ் செய்வாம். (உ)

விளக்கமாகச் சொல்லும் நானார்த்த தீபிகைக்கு ஓரிடையூறும் நேராமல் விரிந்தவையெல்லாம் சுருக்கமாக அதனை விளம்பிடுதற்கு, அன்பினாலே மூவுலகங்களையும் ஈன்று அத் திரிமூர்த்திகளையும் தந்தருளிய திரிபுரசுந்தரித் தாயாரது திருவடிகளை வணங்குவாம்.

திரிபுரசுந்தரி ஆசிரியர்க்கு உபாசனாமூர்த்தி. அ—பண்டறிசுட்டு.

### விநாயகர்

பதமார் பொருள்சொ னானார்த்த தீபி கைப்பேர்ப் பனுவல்செயத்
திதமா விரும்பு மகமகிழ்ந்து தேம்பித் தளைபட் டுழலாமே
யிதமாஞ் செம்பா கச்சொல்வள மீய மலர்ப்பொன் னடியேத்தி
மதமார் வெள்ளிக் கோட்டுமுக மாதங் கத்தை வணங்குவாம். (ங)

பதங்களுக்குரிய பொருள்களை எடுத்துச் சொல்லும் நாநார்த்த தீபிகை யென்னும் பெயர்கொண்ட நூலை யியற்ற உறுதியாக விரும்புகின்ற மனம் மயங்கி மெலிந்து தடைபட்டு உழலாமல் இனிமையான செம்பாகமாயுள்ள சொல்வள மளிக்கும்படி தாமரைமலர் போன்ற அழகிய திருவடிகளைத் துதித்து மதம் பொருந்திய வெள்ளைக் கொம்பினை யுடைய யானைமுகக்கடவுளை வணங்குவாம்.

## முருகக்கடவுள்

கருங்கடற் சுருக்கி யுண்டு செந்தமிழ்க் கடல்வி ரிக்கும்
அருந்தவக் குறுமு னிக்கன் றருள்குரு பரன்றாள் போற்றி
வருந்துறு தையம் பேத மயக்கமு நீங்கப் பத்துத்
திருந்தழ கொடுநா னார்த்த தீபிகை செப்ப லுற்றாம். (௪)

கருமையாகிய கடலை யாசமனஞ் செய்து செந்தமிழ்க் கடலை விரித்த அரிய தவத்தினையுடைய அகத்திய முனிவர்க்கு அந்நாளில் அருளிய குருமுதல்வரது திருவடிகளை வணங்கி, வருந்தாது ஐயம் திரிபு அஞ்ஞான மூன்றும் நீங்க, திருந்திய பத்துவித அழகோடு நாநார்த்த தீபிகையைச் சொல்லத் தொடங்கினோம்.

## திருமால்

திருமறு மார்ப னுலகெலாம் புரக்குந் திருநெடு மால்கல்வி பயிறற் [ந்து
கொருமுத லென்னத் தொழத்தகுங் கடவு ளுபயதா மரைப்பதம் பணி
வருககர திெ னகரவீ றெதுகை வைத்ததிற் கலப்புறா தடைவே [வாம்.
பொருள்பெற வெழுத்தின் முறையினா னார்த்த தீபிகை யெனவிது புகல்

இலக்குமி தேவியையும் ஸ்ரீவத்ஸம் என்னும் மறுவையும் மார்பிலே யுடையவனும் உலகமெல்லாம் காப்பவனும் திரிவிக்ரமாவதாரமெடுத்தவனும் கல்வி பயிலுதற்கு ஒப்பற்ற தலைமையை யுடையவனென்று தொழத்தக்க கடவுளுமாகிய திருமாலினது திருவடித் தாமரைக ளிரண்டையும் வணங்கி, முதலிலே வருகிற ககரமுதலாக னகரமீறாக எதுகை வைத்து அவற்றில் ஒன்றிற் பிறிதொன்று கலவாமல் அடைவே பொருள் விளங்க எழுத்துக்களது முறையில் நாநார்த்த தீபிகை என இந்நூலை இயற்றுவாம்.

## கலைமகள்

படிகவெண் ணிறத்த ளாய்ச்செம் பதுமத்தோ னுன்மு கத்துங்
குடிகொண்மெய்ஞ் ஞான மூர்த்தி குசேசயப் பதம்வ ணங்கி
யடியொன் றி லிரண்டு மொன்று மாகவோர் தொடையிற் செய்யுண்
முடியவோர் சொன்னு னார்த்த முறைதர மொழிகின் றேனல். (சு)

பளிங்கு போன்ற வெள்ளை நிறத்தளாய்ச் செந்தாமரையில் வீற்றிருக்கும் பிரமனது நான்கு வாய்களிலும் குடிகொண்டிருக்கும் உண்மை ஞானவடிவினளாகிய கலைமகளது தாமரைமலர் போன்ற திருவடிகளை வணங்கி, அடியொன்றிலே இரண்டு சொற்களும் ஒரு சொல்லுமாக ஒருநெறிப்படச் செய்யுள் பூர்த்தியாக ஓர் சொல் நாநார்த்தத்தை முறையாகச் சொல்கின்றேன்.

## ஆசிரியர்

கந்தன் பழனிப் பதிக்குமரன் கருணை பெறுசெண் பகக்கவிஞன்
மைந்த னெழுதா யுதப்பெருமா ளெனுநா வலர்கோன் வரமதனால்
வந்த வடியே னவரிருதாள் வணங்கிப் புகல்வன் வடநூற்சொற்
செந்த மிழினும் பொருடொகுத்துச் செயுநா நார்த்த தீபிகையே. (எ)

கந்தனும் பழனிப்பதியில் எழுந்தருளியிருக்கும் குமரனுமாகிய முருகக்கடவுளது திருவருளைப்பெற்ற செண்பகக் கவிராயர்தம் புத்திரர் எழுதாயுதப் பெருமாள் என்னும் நாவலர்கோனுடைய வரத்தால் தோன்றிய அடியேன் அன்னார் இரண்டு திருவடிகளையும் வணங்கி வடநூற் சொற்களையும் செந்தமிழிற் பொருள்தொகுத்துச் செய்யும் நாநார்த்த தீபிகையைச் சொல்வேன்.

## அவையடக்கம்

கற்பநா டுறுமைந் தர்க்கோர் பாடமா மென்னக் கற்ற
விற்பனர் கொள்வ ராக வேண்டுகொண் டடைசொற் கஞ்சிப்
பற்பல விருத்தத் தாலும் பகர்ந்தவுந் தள்ளா ரென்றோர்
சொற்பல பொருள்வி ளக்கஞ் சொல்லின னகைநா ணுமே. (அ)

கற்க விரும்பும் இளைஞர்க்கு ஒரு பாடமாகுமென்று கற்ற புலவர் கொள்ளுக: வேண்டுவனவற்றைக் கொண்டு அடைமொழிகளை ஒழித்தற்காகப் பற்பல விருத்த பேதங்களாலும் சொல்லியவற்றையும் அவர் தள்ளார் என்று கருதி ஓர் சொற் பலபொருள் விளக்கம் சொல்லினேன் நகைக்கு நாணுதலின்றி.

# நாநார்த்த தீபிகை

## ஓரெழுத்துப் பலபொருள்

1. அப்பர னுமைமால் வேதா வணியாமை யமர்கால் சூட்டாம்
கப்பிர மன்காற் றான்மாக் கனல்கதிர் நமன்ம யிற்பேர்
குப்புவி யிடைச்சொல் பாவஞ் சிறுமையும் பழிப்புங் கூறும்
விப்பர மான்மாக் காற்றோ ருபசர்க்கம் விழிவிண் புள்ளே.

அ-சிவன்[1], உமாதேவி[2], விஷ்ணு[3], பிரமன்[4], ஆபரணம்[5], ஆமை[6], போர்[7], பாதம்[8], சூட்டு[9]. [1-8: அகாரோ ப்ரஹ்மவிஷ்ண்வீசகமடேஷ்வ... ரணே, ... ஸந்தோஷணேऽப்ரஸ்ரவாஸ்தா—நா. ர. i, 9. 9: அஸ்த்ரீவாயாம் ..., கலேவரே—நா. ர. i, 22.]

க—பிரமன்[1], காற்று[2], ஆன்மா[3], நெருப்பு[4], சூரியன்[5], யமன்[6], மயில்[7]. [1-7: கோ ப்ரஹ்மண்யாத்மநி ரவௌ மயூரேऽக்நௌ யமேऽநிலே—அ. ஸ. i, 5.]

கு—பூமி, ஓர் இடைச்சொல், பாபம், சிறுமை, பழிப்பு. [1, 3-5: கு: ... ஸாவி கு பாபேऽல்பே குத்ஸாயாம்—நா. ர. i, 25. 2: நன். 298.]

வி—பரமாத்மா, காற்று, ஓர் உபசர்க்கம், கண், ஆகாசம், பறவை. [1, 2, 4-6: விச்வாத்மநி த்ருஷ்டௌ வாதே வயஸி பக்ஷிணி—நா. ர. i, 70. 3: வி—ஸ. அக.]

2. ஆவிரக்கம் பசுச்சொலிசை புழுக்கநினை வாச்சா
வற்புதமோர் வினாவினையின் விகுதிவாய் திறத்தல்
ஓவிடைச்சொன் மதகுநீர் தாங்குகத விரக்கம்
ஓர்வினா வோலமிட்ட விளியோசை வியப்பாம்
மாவலிசெய் யவள்செல்வ நிலம்வியங்கோ ளசைச்சொல்
வண்டுகறுப் பளவுபுத்தி பரிகரிமைம் மாநென்
மாவயல்சந் திரன்மாதம் வெறுப்போர்சிற் றெண்ணோர்
மரம்பெருமை யழைக்கைமர ணஞ்சகம்வே லையுமே.

ஆ—இரக்கம்[1], பசு[2], சொல்லிசை[3], புழுக்கம்[4], நினைவு[5], ஆச்சா மரம்[6], வியப்பு[7], ஓர் விகு[8], ஓர் வினைவிகுதி[9], வாய்திறத்தல்[10]. [1: சூடா. xi, வ, 13. 2: திவா. iii, 17. 3, 5, 7: ஆ...ஸ்ம்ருதௌ வாக்யே ... அநுகம்பா ...—நா. ர. ஏகாக்ஷர. 2. வாக்யே மென்பது வாக்யஸ்மரணே மென்றுரைகாரர் சொல்லுதலால் அது சொல்லிசையாகலாமென்று தோன்றுகிறது. சூடா. xi, வ, 3 இசை யென்று ஓர் பொருள் தருதலால் சொல் இசை இரண்டு பொருளாகவுங் கூடும். 4: ஆகாரஸ்ச...வரிதாவே—நா. ர. i, 10. 6: திவா. iv, 4. 8: நன். 421, உரை. 9: நன். 140. 10: வழக்கு.]

ஓ—ஓர் இடைச்சொல்[1], மதகு நீர் தாங்கு கதவு[2], இரக்கம்[3], ஓர் விகு[4], ஓலமிட்ட விளி[5], யோனி[6], வியப்பு[7]. [1, 4. நன். 423. 2, 3: சூடா. xi, வ, 17. 5: வழக்கு. 6: ஓகார:...யோநிஷ்ச — நா. ர. i, 19. 7: நன். 421, உரை.]

மா—வலி[1], இலக்குமி[2], செல்வம்[3], நிலம்[4], வியங்கோளசைச் சொல்[5], வண்டு[6], கறுப்பு[7], அளவு[8], புத்தி[9], குதிரை[10], யானை[11], பன்றி[12], நெல்லுயா[13], வயல்[14], சந்திரன்[15], மாசம்[16], வெறுப்பு[17], ஓர் சிற்றெண் $(\frac{1}{20})$[18], ஓர் மரம்[19], பெருமை[20], அழைக்கை[21], மரணம்[22], சனம்[23], கடற் கரை[24]. [1, 3, 4, 10, 13, 18, 21: பிங். x, 919. 2, 8, 9, 15, 16, 22-24: மாருதே மாஸிம மா:...; மா ஸ்ரீ மானே ந்ருதௌ வேலாயோ ஸ்ரீ..., மாதவ்யம்...ஜனே—நா. ர. i, 59, 60. வேலை யென்பதற்குப் பலபொருளுளவேனும் உரைகாரர் கொண்ட பொருள் இங்குக் கொள்ளப்பட்டது. 5: நன். 439. 6, 7, 19, 20: திவா. xi, 189. 11, 12: குதிரையும் யானையும் பன்றியு மாவே என்று திவா. iii, 65 உரைக்குமாயினும் இடம் நோக்கி மா அவற்றின் ஆண்களைக் குறிக்குஞ் சொல்லாகவே கொள்ளப்படும். 14: பிங். iv, 124. 17: சூடா. xi, வ, 11.]

3. காவசைச் சொற்று லாம்பூஞ் சோலைதோட் சுமைகா வென்றல்
சேவிள வெருத ழிஞ்சில் தேவநுக் கிரகந் தெய்வம்
தூவெள்ளை பற்றுக் கோடு நடுக்கந்தூ பம்பொன் சுத்தம்
பாவென்ப கிரணஞ் செய்யுள் பரப்புக்கா ருகர்தந் நூற்பா.

கா—ஓர் அசைச்சொல், துலாம், பூஞ்சோலை, தோட்சுமை, காவெனல். [1: நன். 441. 2-4: பிங். x, 309. 5: திவா. xi, 83.]

சே—இளவெருது, அழிஞ்சில். [1: பிங். viii, 160. பேரெருதின் பெயர் வேறு கொடுக்கப்பட்டிருத்தல் நோக்கத்தக்கது. 2: சூடா. iv, 7.]

தே—அனுக்கிரகம், தெய்வம். [1: அக. 2: பிங். x, 646.]

தூ—வெள்ளை, பற்றுக்கோடு, நடுக்கம், தூபம், பொன், சுத்தம். [1: அக. 2, 6: பிங். x, 634. 3-5: யஶுநா யஶுவெ ஸூத்ரா கஶெஷு விதெத —நா. ர. i, 50. 'வித்தம்'-பொன்—பிங். vi, 131.]

பா—கிரணம், செய்யுள், பரப்பு, நெய்வோர் நூற்பா. [1: ஶாஸ்த்ர ரஶெ்ளா—நா. ஸ. i, 6. 2: திவா. x, 111. 3, 4: சூடா. xi, வ, 13.]

4. கோவிழி கணைநீர் திக்குக் குலிசம்விண் கதிர்பா னல்குங்
கோவிடை மதிசு வர்க்கங் குருசில்வாக் கிலக்குப் பூமி
பூவனப் பிடம்பார் கூர்மை பொலிவுடல் கமலங் கண்ணிற்
பூவிளை வொடுபி றப்பு நிலம்புட்ப நகர்பன் முப்பேர்.

கோ—கண்[1], அம்பு[2], நீர்[3], திசை[4], வச்சிராயுதம்[5], ஆகாசம்[6], கிரணம்[7], பால்தரும் பசு[8], எருது[9], சந்திரன்[10], சுவர்க்கம்[11], அரசன்[12], வாக்கு[13], இலக்கு[14], பூமி[15]. [1-5, 7-11, 13, 15: ஜெள:...வஜ்ரஷெஹ உநெ்ர வாஜ்ஶுதிஷெ்யநஷ..., ... ரஶ்ஶீஉஜ்ஷாணஸுரவஜ்ராஷ ... —நா. ர. i, 28. 6: ஜொ—ஸ. அக. 12: திவா. xi, 286. 14: அக.]

பூ—அழகு[1], இடம்[2], பூமி[3], கூர்மை[4], பொலிவு[5], உடல்[6], தாமரை[7], கண்ணிற்பூ[8], விளைவு[9], பிறப்பு[10], நிலம்[11], புட்பம்[12], நகர்[13]. [1, 4, 5: திவா. xi, 75. 2, 3: ஸஶுஸ்த ஸஶுதிரிவ க்ஷிதௌ; ஸுரெந வ—ஈ. ஸ. i, 9, 10. 6, 13: வபு: ஶரீரெ நகரெ வ — ஈ. ஸ. i, 12. 7: அக. நி. 179. 8: அக. 9: வழக்கு. 10, 12: பிங். x, 845. 11: பிங். iv, 31.]

5. ஊவென்ப துணவோ டூனும்
தாவயின் பகைவ ருத்தம்
நாவென்ப நடுவு நாக்கும்
யாவொரு வினுவ சைச்சொல்.

ஊ—உணவு, ஊன். [1: அக. 2: தொல். எழுத். 269.]

தா—வயின், பகை, வருத்தம். [1: வயின் என்பது இடமென்னும் பொருளுடையதாயின் தா தெனுங்குச் சொல்லாதல் கூடும். ஆயினும் திவாகரம் முதலிய நிகண்டுகளைத்தினுங் காணும் வலியென்னும் பொருள் இங்குக் காணப்படாமையின் வயின் வயமென்பதற்கு எழுதுவோரால் நேர்ந்த பிழையோ வென்று ஐயம் உண்டாகின்றது. 2: சூடா. xi, வ, 13. 3: திவா. xi, 125.]

நா—நடு, நாக்கு. [1: பிங். iv, 45. 2: பிங். v, 318.]

யா—ஒரு வினு, ஓர் அசைச்சொல். [1: நன். 67. 2: நன். 441.]

6. சீயெழில் கமலை வாணி யிலவங்கஞ் செல்வம் வில்வம்
சீயெனல் சாளம் வேடம் விடம்புண்ணிற் சீபன் ஞென்றும்
தீயென்ப நெருப்புப் புத்தி நிரையந்தீங் கென்ன நாற்பேர்
மீயுய ரம்விண் மேலாம் வீயென்ப பூவும் புள்ளும்.

சீ—அழகு[1], இலக்குமி[2], சரசுவதி[3], இலவங்கம்[4], செல்வம்[5], வில்வமரம்[6], சீயெனல்[7], சாளமரம்[8], வேடம்[9], விடம்[10], புண்ணிற்சீ[11]. [1-6, 8-10: ஶ்ரீர்வேஷ ... ஶோபாஸம்பத்ஸரளஶோபாவிஷு; வாணீலக்ஷ்மீலவங்கேஷு விஷே பில்வே—நா. ர. i, 67, 68. 7: அக. 11: வழக்கு.]

தீ — நெருப்பு, புத்தி, நரகம், தீங்கு. [1, 4: பிங். x, 616. 2: ധീ:—ஸ. அக. 3: சூடா, xi, ம, 9.]

மீ—உயரம், ஆகாசம், மேல். [1: திவா. v, 231. 2: திவா. i, 36. 3: திவா. i, 144.]

வீ—புட்பம், பறவை. [1, 2: பிங். x, 1059.]

7. ஐயரன் றிசாமு கங்கை வினைப்பெயர் விகுதி யாதி
யையுரு போடி டைச்சொ லழகையன் கபம்வெற் புச்சி
கையிடந் திரள்வி யூகஞ் சிறுமையின் முகட்டின் மூட்டுங்
கையொரு விகுதி செய்யு முறையோர்மெய் யுறுப்பொ ழுக்கம்.

ஐ—சிவன்[1], திசாமுகம்[2], கை[3], வினைப்பெயர் விகுதி முதலியன[4], ஐயுருபு[5], ஓர் இடைச்சொல்[6], அழகு[7], ஐயன்[8], கபம்[9], மலையுச்சி[10]. [1-3, 10: ஐ: ஶங்கரோ திக்முகே ஹஸ்தே ஹஸ்த்யுச்சிகரே—நா. ர. i, 19. 4: நன். 140. 5: நன். 296. 6: நன். 244. 7: பிங். vii, 183. 8: அக. நி. 45. 9: பிங். v, 359.]

கை—இடம்[1], திரள்[2], படைவகுப்பு[3], சிறுமை[4], வீட்டு முகட்டில் மூட்டுங் கைம்மரம்[5], ஒரு விகுதி[6], செய்யும் முறை[7], உடலுறுப்பு[8], ஒழுக்கம்[9]. [1: சூடா. xi, ய, 11. 2: வழக்கு. 3, 4, 8, 9: பிங். x, 399. 5: அக. 6: நன். 140, உரை. 7: கையறியாப் பேதை—குறள், 206.]

8. தையொரு மாதம் பூசம் வையென்ப கூர்மை நெற்றுள்
பையராப் படம்ப டாதி யாற்செய்த வுறைபச் சைப்பேர்
மையிரு ளஞ்ச நஞ்செம் மறிமுகில் கண்ணிற் றீட்டு
மையொரு விகுதி குற்ற மலட்டொடு கறுப்பொன் பான்பேர்.

தை—ஒரு மாசம், பூச நட்சத்திரம். [1, 2: சூடா. xi, ட, 25.]

வை—கூர்மை, நெல்லின் தாள். [1, 2: திவா. xi, 375.]

பை—பாம்பின் படம், துணி முதலியவற்றாற் செய்த உறை, பச்சை. [1, 3: பிங். x, 860. 2: அக. நி. 182.]

மை—இருள்[1], அஞ்சனம்[2], செம்மறியாடு[3], மேகம்[4], கண்ணிலே தீட்டும் மை[5], ஒரு விகுதி[6], குற்றம்[7], மலடு[8], கறுப்பு[9]. [1: சூடா. xi, ய, 11. 2, 8: பிங். x, 967. 3, 4, 7, 9: திவா. xi, 358. 5: அக. 6: நன். 140, உரை.]

## ககர வெதுகை

9. பகவன்மால் பிரமன் புத்தன் சினன்குருப் பரமன் றேவன்
பகவதி முதல்வி செல்வி பார்ப்பதி துர்க்கை வாணி
அகவலோர் பாவோ ரோசை மயிற்குர லழைத்த லாடல்
தகவரு ளுரிமை பண்பாஞ் சகனோர்மன் சகாய னண்பன்.

பகவன்—திருமால்[1], பிரமன்[2], புத்தன்[3], சினன்[4], குரு[5], சிவன்[6], தேவன்[7]. [1, 3, 5, 6: ஹ௩வாந் வாஸுவிஷ்ணுஸ்வயம்பூஜேஷ்டாஶ்௨—நா. ர. ஸ-ஜீக்ஷர. 25. 2: பிங். ii, 64. 4: ஹ௩வாஜ்ஜிநே — உ. கொ. 338. 7: ஸ. அக.]

பகவதி — முதல்வி, இலக்குமி, பார்வதி, துர்க்கை, சரசுவதி. [1: 2: ஹ௩வதீ—ஸ. அக. 3: ஹ௩வத்ரீகௌ—நா. ர. ஸஜீக்ஷர. 25. 4: பிங். ii, 32. 5: ]

அகவல்—ஓர் பா, ஓர் ஓசை, மயிற்குரல், அழைத்தல், ஆடல். [1, 3, 5: சூடா. xi, க, 16. 2: யாப்பருங்கலம், 69. 4: திவா. x, 49.]

தகவு — அருள், உரிமை, பண்பு. [1: பிங். vii, 238. 2: அக. 3: அ. வி. நி. 10.]

சகன்—ஓர் அரசன், சகாயன், நண்பன். [1: ஶகோ...ராஜ-ஹேதே—க. ஸ. ii, 17. 2, 3: ஸஹா ஸஹாயே மித்ரே வ—க. ஸ. ii, 28.]

10. விககமே கிரக மம்பு பறவைமே கம்விண் மீனும்
விகடமே யகலம் பேதம் விசாலஞ்சுந் தரமுன் மத்தம்
முகடென்ப வீட்டி னுச்சி மலைத்தலை முலைமு கப்பேர்
சகதிசே றுலகம் பூமி சநமீரா றெழுத்தின் சந்தை.

விககம்—கிரகம், அம்பு, பறவை, மேகம், நட்சத்திரம். [1: விஹ௩:— ஸ. அக. 2, 3: விஹ௩ஸ்து நபுஷி: ஸ்ராஞாஶரே வ விஹஜ்௦கௌ—௦கௌ. ௩, 51. 4, 5: 'விஹ௩: ஆகாசத்திற் செல்வது' என்னும் தாதுப்பொருளை வைத்து இரண்டு பொருள்களையும் கொள்ளலாம்.]

விகடம்—அகலம், பேதம், விசாலம், அழகு, உன்மத்தம். [1, 3, 4: விகட: வபுஷிகே ரூபே விஶாலே . . . — நா. ர. iii, 106. 2, 5: அக.]

முகடு—வீட்டின் உச்சி, மலையுச்சி, முலைமுகம். [1, 2: அக. 3: ]

சகதி—சேறு, உலகம், பூமி, சனம், பன்னிரண்டெழுத்துச் சந்தம். [1: பிங். iv, 159. 2-5: ஜகதீ ஹம்ஜவலி கூதிகொள,...ஜநெ லொகெ —சு. வ. iii, 253.]

11. சகநியம் பரிக்கு ரம்பிந் தினதுவா லுபத்தந் தாழ்மை
ககமென்ப பறவை காற்றுக் கணைவிண்மீன் கிரக மைம்பேர்
சுகமின்பங் கிளிநீர் வில்வந் துணியங்கப் புதல்சு வர்க்கம்
நகம்வெற்பு மரம்பாம் போர்மெய் யுறுப்புநா குணம ரப்பேர்.

சகநியம்—குதிரைக் குளம்பு(?), பிந்தினது, வால், உபத்தம், தாழ்மை. [1: 2, 4, 5: ஜவநம் ஸிஸ்ர மெஹ்ஸெநு —சு. வ. iii, 480. உரைகாரர் 'சுெநு வஸ்ராஜெய' என்றனர். ஜவநொஸெநு-ஸயெஜெஸவி வ—சு. கொ. III, iii, 158. தாழ்மை—அதமம். 3: மேற்கோளி லுள்ள 'ஸிஸ்ர' என்பதற்கு 'வால்' எனவும் ஒரு பொருள் உண்டு.]

ககம் — பறவை, காற்று, அம்பு, நட்சத்திரம், கிரகம். [1-5: வமாஷ்வூரெறுநூஙவிஸாறுஹ...வாயவ:—நா. ற. ii, 28. நட்சத்திரத் திற்கு மாறாக 'சூரிய சந்திரர்' காணப்படுகிறது. சு. வ. ii, 30, 31-ம் வமொ ஸூறுஹவகூதிஷங; ஸெஸ என்றது.]

சுகம் — இன்பம், கிளி, நீர், வில்வம், துணியங்கப்புதல், சுவர்க்கம். [1, 3, 6: ஸுவெ ஷாரஞ்ஙஸாவஙு—நா. ற. ii, 24. 2: ஸுகொ...கீரயொ: — சு. வ. ii, 18. 4: 5: ஸுகஂ நிவெண—சு. வ. ii, 19.]

நகம்—மலை, மரம், பாம்பு, ஓர் உடலுறுப்பு, நாகுணமரம். [1, 2: ஸெமவறுகெஷள நமெள — சு. கொ. III, iii, 19. 3: நம:—ஸ. அக. 4: நவ:—சு. கொ. II, vi, 83. 5: அக.]

12. மகம்வேள்வி விழாவோர் நாளாம் மகன்மைந்தன் புருட னென்ப
முகமோர்மெய் யுறுப்பா ரம்பம் பிரதான முகப்பு பாயம்
யுகநுக முழநான் குள்ள துபயங்கி ருதாதி யும்பேர்
மகரமோர் நிதியம் வன்மீன் மலர்த்தாதோ ரிராசி யோர்மீன்.

மகம்—யாகம், உற்சவம், ஓர் நட்சத்திரம். [1: ஊெவ: — சு. கொ. II, vii, 13. 2: ஊஹ: — சு. கொ. I, vii, 38. 3: ஊவ: —ஸ. அக.]

மகன்—புத்திரன், புருடன். [1: சூடா xi, ர, 16. 2: சூடா. ii, 57.]

முகம்—ஓர் உடலுறுப்பு, ஆரம்பம், பிரதானம், தலைவாயில், உபாயம். [1-5: [illegible]—நா. ரு. ii, 23, 24.]

யுகம்—நுகம், நான்கு முழமுள்ளது, இரண்டு, கிருதமுதலிய சதுர்யுகம். [1-4: [illegible]—நா. ரு. ii, 38.]

மகரம்—நவநிதியு ளொன்று, முதலை, பூந்தாது, ஓர் இராசி, சுறு மீன். [1, 2, 4: [illegible]— வி. [illegible] ரு, 111. 3, 5: சூடா. xi, க, 1.]

13. சிகரிகோ புரம்வி ருக்கங் கருநாரை வெற்புஞ் செப்பும்
புகர்நிற மழைக்கோள் குற்ற மிபமுகப் பொறிபுற் கென்றல்
பகர்தல்சொல் லுதல்விற் றற்பேர் பகினிசோ தரியும் பெண்ணும்
சுகர்மம்நல் வினையோர் யோகந் துகளென்ப குற்றந் தூளாம்.

சிகரி—கோபுரம், மரம், கருநாரை, மலை. [1, 3: சூடா. xi, க, 2. 2, 4: [illegible]—க. கோ. III, iii, 106.]

புகர்—நிறம், சுக்கிரன், குற்றம், யானை முகத்திற் புள்ளி, புற்கென்றல். [1: திவா. viii, 55. 2, 3, 5: பிங். x, 817. 4: பிங். viii, 102. ‘புகர் முகம்-யானை’.]

பகர்தல்—சொல்லுதல், விற்றல். [1, 2: சூடா. xi, ட, 6.]

பகினி—சகோதரி, ஸ்திரீ. [1: [illegible]—க. கோ. II, vi, 29. 2: [illegible]—ஸ. அக.]

சுகர்மம்—நல்வினை, ஓர் யோகம். [1, 2: [illegible]—ஸ. அக. 2: சோதிட நூலிற் கூறப்படும் 27 யோகங்களுள் ஏழாவது.]

துகள்—குற்றம், தூள். [1, 2: பிங். x, 617.]

14. அகலமே விரிவு மார்பா மகலுள்பீ டகல நாடூர்
இகல்பகை வலிபோர் முப்பே ரிகுளையே தோழி சுற்றம்
உகல்கெட லுகுதல் சிந்த லுகளலே குதித்தல் தாண்டல்
பகலொளி நடுப்பி ளத்தல் பொழுதுநாள் பகலோ னீங்கல்.

அகலம்—விரிவு, மார்பு. [1, 2: சூடா. xi, ச, 20.]

அகலுள்—பெருமை, அகலம், நாடு, ஊர். [1: திவா. viii, 20. 2: திவா. viii, 34. 3: திவா. v, 15. 4: திவா. v, 92.]

இகல்—பகை, வலி, போர். [1-3: பிங். x, 126.]

இகுளை—தோழி, சுற்றம். [1, 2: பிங். x, 127.]

உகல்—கெடல், உகுதல், சிந்தல். [1-3: அக.]

உகளல்—குதித்தல், தாண்டல். [1: சூடா. ix, 38. 2: பிங். vii, 428.]

பகல்—ஒளி[1], நடு[2], பிளத்தல்[3], பொழுது[4], நாள்[5], சூரியன்[6], நீங்கல்[7]. [1-3,5: திவா. xi, 324. 4, 6, 7: பிங். x, 713.]

15. புகல்குதிர் பிரவே சித்த லுடல்புகு மிடஞ்சொல் வென்றி
புகழென்ப துதிகீர்த் திப்பேர் புகறலே குறித்தல் சொல்லல்
அகளமே மிடாத்தா ழிப்பேர் அகறனீங் குதல கற்சி
அகிவிருத் திரன்பாம் பீய மகிலம்பூ மியும னைத்தும்.

புகல்—குதிர், புகுதல், உடல், புகுமிடம், சொல், வெற்றி. [1, 3, 5, 6: பிங். x, 818. 2, 4: அக.]

புகழ்—துதி, கீர்த்தி. [1, 2: அக.]

புகறல்—குறித்தல், சொல்லல். [1: சூடா. viii, 35. 2: திவா. 1, 2.]

அகளம்—மிடா, தாழி. [1: திவா. vii, 262: 2: திவா. vii, 263.]

அகறல்—நீங்குதல், விரிவு. [1, 2: அக.]

அகி—விருத்திராசுரன், பாம்பு, ஈயம். [1-3: அஹி: ஸர்ப்பே வ்ருத்ரே வப்ரே—அ. ஸ. ii, 583. 'வப்ரம் ஈயம்'—அ. கோ. II, ix, 105.]

அகிலம்—பூமி, அனைத்தும். [1: பிங். iv, 2. 2: அகிலம்—அ. கோ. III, i, 65.]

16. திகிரிசக் கிரம்வேய் வட்டந் தேருருள் திரிகை வெற்பாம்
வகிரென்ப வழிதோ லின்வார் வகிர்தல்வார்க் கிடல்பி ளத்தல்
குகுமதிக் கலைதோற் றுத நிசிகுயிற் றொனியோர் நாடி
சகுடநாய் பொதியஞ் சேம்பாந் தகுதிதக் கதுபண் பென்ப.

திகிரி—சக்கிரம்[1], மூங்கில்[2], வட்டம்[3], தேர்[4], தேருருளை[5], திரிகை[6], மலை[7]. [1-5, 7: பிங். x, 607. 6: அக.]

வகிர்—வழி, தோலின்வார். [1: பிங். iv, 32. 2: அக.]

வகிர்தல்—வார்ந்திடல், பிளத்தல். [1, 2: அக.]

குகு—சந்திரகலை தோற்ருத இரவு, குயிலின் தொனி, ஓர் நாடி, [1-2: 𑌕𑍁𑌹𑍂𑌰𑍍𑌨𑌷𑍍𑌟𑍇𑌨𑍍𑌦𑍁𑌦𑌰𑍍𑌶𑍇 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍𑌕𑍍𑌵𑌣𑌿𑌤𑍇 𑌕𑍋𑌕𑌿𑌲𑌸𑍍𑌯 𑌚— 𑌅. 𑌸. ii, 583. 3: 𑌕𑍁𑌹𑍂𑌃—𑌶𑌾𑌣𑍍𑌡𑌿𑌲𑍍𑌯𑍋𑌪𑌨𑌿𑌷𑌤𑍍, i, 4.]

சகுடம்—நாய், பொதியமலை, செம்பு. [1, 2: 𑌜𑌕𑍁𑌟𑌃 —𑌸. அக. 3: திவா. iv, 146.]

தகுதி—தக்கது, பண்பு. [1: திவா. viii, 100. 2: அக.]

17. மகுடமோர் சிவாக மஞ்சுற் றிக்கட்டுஞ் சடைமௌ லிப்பேர்
ககுதமுக் கியமெ ருத்தி னிமில்செங்கோல் கனக தண்டம்
பகுதிபிர கிருதி சேனை குடியிறை வளம்பங் கீடாம்
சகுநம்புட் பொதுக்கி ழங்கு நிமித்தமங் களவி ருப்பம்.

மகுடம்—ஓர் சிவாகமம், சுற்றிக்கட்டுஞ் சடை, முடி. [1, 3: 𑌮𑌕𑍁𑌟𑌂—𑌸. அக. 'மகுடம்' பிறைவடிவினதாய்க் கிரீடமௌலிகளின் வேருனது. 2: வழக்கு.]

ககுதம்—முக்கியம், எருத்தின் இமில், செங்கோல், கனகதண்டம். [1-4: 𑌪𑍍𑌰𑌾𑌧𑌾𑌨𑍍𑌯𑍇 𑌰𑌾𑌜𑌲𑌿𑌙𑍍𑌗𑍇 𑌚 𑌵𑍃𑌷𑌾𑌙𑍍𑌗𑍇 𑌕𑌕𑍁𑌦𑍋𑌽𑌸𑍍𑌤𑍍𑌰𑌿𑌯𑌾𑌮𑍍 —𑌅. 𑌕𑍋. III, iii, 91.]

பகுதி—பிரகிருதி, சேனை, குடியிறை, வளம், பங்கீடு. [1-3, 5: நிக. 11. 4: ]

சகுநம்—பறவைப் பொது, கிழங்கு, நிமித்தம், மங்களவிருப்பம். [1: 𑌶𑌕𑍁𑌨𑌃 𑌪𑌕𑍍𑌷𑍇—𑌅. 𑌸. iii, 415. 2: பிங். ix, 171. 3, 4: 𑌶𑌕𑍁𑌨𑌂 𑌸𑍍𑌯𑌾𑌚𑍍𑌛𑍁𑌭𑌶𑌂𑌸𑌿𑌨𑌿𑌮𑌿𑌤𑍍𑌤𑍇—𑌅. 𑌸. iii, 415. 𑌶𑍁𑌭𑌶𑌂𑌸𑌿 𑌨𑌿𑌮𑌿𑌤𑍍𑌤𑍇—𑌮𑍇. 𑌨, 141, 𑌶𑍁𑌭𑌾𑌶𑌂𑌸𑌨𑌿𑌮𑌿𑌤𑍍𑌤𑍇—𑌨𑌾. 𑌰. iii, 269. இப்பிரமாணங்களால் மூலவாக்கியம் 'மங்களங் குறிநிமித்தம்' என்றிருத்தல் நலமென அறியலாகும். ஆயினும், 𑌶𑌕𑍁𑌨𑌂 𑌚 𑌨𑌿𑌮𑌿𑌤𑍍𑌤𑌂 𑌚 𑌶𑍁𑌭𑌾𑌶𑍁𑌭𑌸𑍂𑌚𑌕𑍇𑌽𑌪𑌿 𑌚—𑌵𑍇. 274, 33, 𑌶𑌕𑍁𑌨𑌂 𑌚 𑌨𑌿𑌮𑌿𑌤𑍍𑌤𑌂 𑌚 𑌶𑍁𑌭𑌾𑌶𑍁𑌭𑌸𑍂𑌚𑌕𑍇 𑌉𑌭𑍇—𑌨𑌾. 𑌰. 𑌸𑌰𑍍𑌗. 23. இவை சகுனமும் நிமித்தமும் மங்கலங் குறிப்பது என்னும் பொருளன என உணர்த்தும். 𑌶𑌕𑍁𑌨𑌸𑍍𑌤𑍁...;...𑌶𑍍𑌰𑍀 𑌤𑍁 𑌨𑌿𑌮𑌿𑌤𑍍𑌤𑌾𑌦𑍍𑌵𑌾 𑌶𑍁𑌭𑌾𑌶𑍁𑌭𑌃 𑌸𑍂𑌚𑌕𑍇—𑌨𑌾. 𑌸. ii, 204. இது 'சகுனம்' என்பது நிமித்தம், மங்கலங்குறிப்பது என்னும் வேறு வேறு பொருளது என்னும்.]

18. சகுனியோர் கரணம் புள்ளோர் தராதிப னிமித்தம் பார்ப்போன்
முகுரமே மகிழ்கு லாலன் றடிமுகு ளங்கண் ணாடி
குகைநரி வாற்புல் வெற்பின் முழையுமட் குகையுங் கூறும்
நகைவிளை யாட்டின் பம்பூண் சிரிப்பொளி நயச்சொல் பல்லே.

சகுனி—ஓர் கரணம், பறவை, ஓர் அரசன், நிமித்தம் பார்ப்போன். [1-3: 𑌶𑌕𑍁𑌨𑌿: 𑌵𑌿𑌹𑌗𑍇 𑌕𑌰𑌣𑌭𑍇𑌦𑍇 𑌕𑍌𑌰𑌵𑌮𑌾𑌤𑍁𑌲𑍇.—ஸ. ஸ. iii, 416. கரண மென்னும் பொருளில் சோதிடவழக்கு. 4: அக.]

முகுரம்—மகிழமரம், குயவன்தடி, அரும்பு, கண்ணாடி. [1-4: 𑌮𑍁𑌕𑍁𑌰𑍋 𑌮𑌕𑍁𑌰𑍋 𑌯𑌥𑌾; 𑌕𑍁𑌲𑌾𑌲𑌦𑌣𑍍𑌡𑍇 𑌬𑌕𑍁𑌲𑍇 𑌕𑍋𑌰𑌕𑌾𑌦𑌰𑍍𑌶𑌯𑍋𑌰𑌪𑌿—ஸ. ஸ. iii, 589, 590.]

குகை–நரிவாற்புல், மலைக்குகை, மட்குகை. [1, 2: 𑌗𑍁𑌹𑌾 𑌗𑌹𑍍𑌵𑌰𑌃; 𑌗𑍁𑌹𑍍𑌵𑌰𑍇 𑌸𑌿𑌂𑌹𑌪𑍁𑌚𑍍𑌛𑍍𑌯𑌾𑌂 𑌚—ஸ. ஸ. ii, 585. நா. ர. ii, 479 இச்சொற் பொருளுரையில் 𑌸𑌿𑌂𑌹𑌪𑍁𑌚𑍍𑌛𑍀 என்பது 𑌨𑌕𑍍𑌕𑌤𑍋𑌕𑌕𑌸𑌵𑍁 எனப் பொருள்செய்யப்பட்டது. அத் தெலுங்குத் தொடர் நரிவாற்புல் எனப் பொருள்படுவது. 3: அக.]

நகை—விளையாட்டு[1], இன்பம்[2], ஆபரணம்[3], சிரிப்பு[4], ஒளி[5], நயச்சொல்[6], பல்[7]. [1, 2: திவா. xi, 314. 3: அக. 4, 5, 7: பிங். x, 670. 6: திவா. x, 56.]

19. இகத்தனீங் குதல்க டத்தல் விட்டிட லேக லும்பேர்
முகப்புமொள் ளுகைத லைப்பாம் விகற்பம்வேற் றுமைவி தர்க்கம்
இகழ்ச்சிபொச் சாப்பு நிந்தை புகழ்ச்சியேத் துதல்கீர்த் தித்தல்
[கொப் புட்பேர்.
பொகுட்டுத்தா மரைப்பூங் கொட்டை பொருப்புச்சேற் றெழுங்

இகத்தல்—நீங்குதல், கடத்தல், விட்டிடல், ஏகல். [1: பகை... நான்கு மிகவாவாம்—குறள், 106. 2: பிங். vii, 425. 3: அக. 4: திவா. ix, 38.]

முகப்பு—மொள்ளுகை, தலைப்பு. [1, 2: அக.]

விகற்பம்—வேறுபாடு, சந்தேகம். [1, 2: விகல்ப:—ஸ. அக.]

இகழ்ச்சி—மறப்பு, நிந்தை. [1: சூடா. viii, 59. 2: பிங். vii, 120.]

புகழ்ச்சி—துதித்தல், கீர்த்தித்தல். [1, 2: அக.]

பொகுட்டு—தாமரைப் பூங்கொட்டை, மலை, சேற்றி லெழுங் குமிழி. [1-3: பிங். x, 861.]

20. இகுத்தலே மறித்த றாண்ட லெறிதல்துன் புறுத்தல் வீழ்த்தல்
செகுத்தலோ டழைத்த லீதல் விரித்தல்சீத் திடலீ ரைம்பேர்
உகுத்தலூற் றுதல்வி டுத்தல் சொரிதலோ டுதிர்த்த லென்ப
பகுத்தல்வெட் டுதல்கொ டுத்தல் பங்கிட லெனமுப் பேரே.

இகுத்தல்—மறித்தல்[1], தாண்டல்[2], எறிதல்[3], துன்புறுத்தல்[4], வீழ்த்தல்[5], செகுத்தல்[6], அழைத்தல்[7], ஈதல்[8], விரித்தல்[9], துடைத்தல்[10]. [1: திவா. ix, 202. 2, 3: அக. 4, 10: அக. நி. 29. 5, 6: திவா. xi, 30. 7, 8: சூடா. xi, க, 7. 9: திவா. ix, 263.]

உகுத்தல்—ஊற்றுதல், விடுத்தல், சொரிதல், உதிர்த்தல். [1, 4: அக. 2, 3: நிக. 10.]

பகுத்தல்—வெட்டுதல், கொடுத்தல், பங்கிடல். [1: திவா. ix, 111. 2: பிங். vii, 371. 3: திவா. ix, 262.]

21. அகாதம்விண் ணவராற் றொட்ட குளம்பில நிலையா வாழம்
நிகாயமோர் வினைஞர் கூட்டம் பரமான்மா வீடி லக்காம்
நிகாரமே யவமா னம்நெற் றூற்றுகை விழுங்கு தற்பேர்
விகாரம்நோய் திரிபு லாவல் விளையாட்டுச் சினன்றன் கோயில்.

அகாதம்—தேவரால் தோண்டப்பட்ட குளம், பிலம், நிலையா ஆழம். [1: 𑌅𑌖𑌾𑌤𑌂 𑌦𑍇𑌵𑌖𑌾𑌤𑌕𑌮𑍍— 𑌅. 𑌕𑍋. I, x, 27, 2, 3: 𑌅𑌗𑌾𑌧𑍋 𑌽𑌸𑍍𑌤𑌾𑌘𑌰𑌨𑍍𑌧𑍍𑌰𑌯𑍋𑌃—𑌅. 𑌸. iii, 333.]

நிகாயம் — ஓர்வினைஞர் கூட்டம், பரமான்மா, வீடு, இலக்கு. [1: 𑌸𑌧𑌰𑍍𑌮𑌿𑌣𑌾𑌂, 𑌸𑍍𑌯𑌾𑌨𑍍𑌨𑌿𑌕𑌾𑌯𑌃 — 𑌅. 𑌕𑍋. II, v, 42. 1-4: 𑌨𑌿𑌕𑌾𑌯𑌃 𑌸𑌦𑍍𑌮𑌸𑌂𑌘𑌯𑍋𑌃; 𑌪𑌰𑌮𑌾𑌤𑍍𑌮𑌨𑌿 𑌲𑌕𑍍𑌷𑍍𑌯𑍇 𑌚 — 𑌅. 𑌸. iii, 482, 483.]

நிகாரம்—அவமானம், நெல் தூற்றுகை, விழுங்குதல். [1, 2: 𑌨𑌿𑌕𑌾𑌰𑌸𑍍𑌤𑍁 𑌪𑌰𑌾𑌭𑌵𑍇; 𑌧𑌾𑌨𑍍𑌯𑍋𑌤𑍍𑌕𑍍𑌷𑍇𑌪𑍇 — 𑌅. 𑌸. iii, 562, 563. 3: 𑌨𑌿𑌗𑌾𑌰𑌃—𑌅. 𑌕𑍋. III, ii, 37.]

விகாரம்—நோய், திரிபு, உலாவல், விளையாட்டு, சினாலயம். [1, 2: 𑌵𑌿𑌕𑌾𑌰𑍋 𑌵𑌿𑌕𑍃𑌤𑍌 𑌰𑍋𑌗𑍇—𑌅. 𑌸. iii, 596. 3-5: 𑌵𑌿𑌹𑌾𑌰𑌸𑍍𑌤𑍁 𑌜𑌿𑌨𑌾𑌲𑌯𑍇; 𑌕𑍍𑌰𑍀𑌡𑌾𑌯𑌾𑌂 𑌸𑌂𑌚𑌰𑌣𑍇—𑌅. 𑌸. iii, 596, 597.]

22. விகாசம்விள் ளுகைவி ளக்கம் மிகிரமே மேகங் காற்றும்
விகாதமே தடைவி ரோதம் விகிரம்வெண் மணல்புள் ளென்ப

விகாயசம் பறவை விண்ணும் மிகிரன்சூ ரியன்புத் தன்பேர்
விகூடந்தான் மறைவு நிந்தை விகிர்தங்குற் சிதம்பொய் நோயே.

விகாசம் — அலர்கை, விளக்கம். [1: விகாஸ. — ஸ. அக. 2: விகாஶ:—ஸ. அக.]

மிகிரம்—மேகம், காற்று. [1: மிஹிரோ ... ஈஶ்வரே — சு. வ. iii, 588. 2: மிஹிரா வாயுர்...—நா. ர. iii, 347.]

விகாதம்—தடை, விரோதம். [1, 2: விகாத:—ஸ. அக.]

விகிரம்—வெண்மணல், பறவை. [1: விகிரோ வாலுகாயாம் வ—நா. ர. iii. 356. 2: விகிர:—சு. கௌ. II, v, 33.]

விகாயசம்—பறவை, ஆகாயம். [1: விஹாயஸ: — ஸ. அக. 2: விஹாயஸ:—சு. கௌ. I, ii, 2.]

மிகிரன்— சூரியன், புத்தன். [1, 2: மிஹிரோऽர்க்க...புத்தே—சு. வ. iii, 588.]

விகூடம்—மறைவு, நிந்தை. [1, 2: விகூடோ மறைவுநிந்தயோ:—சு. வ. iii, 180.]

விகிர்தம்—குற்சிதம், பொய், நோய். [1, 3: விக்ருதோ ரோகி ..., பீபத்ஸ—சு. வ. iii, 289. 2: விக்ருத—ஸ. அக.]

23\. சகடம் பண்டி சண்டைபொன்னற் கிந்து மறைத லுரோகிணிநாள்
அகடு வயிறு நடுவுள்ளாம் அகணி யுள்ளிட் டதுமருதம்
தகடு பொன்னு திலிலைபோற் சமைத்த திலைபோன் றதுமிலையும்
பகடு பெருமை யானைகடாப் படுவை யோடம் போரெருதே.

சகடம்—பண்டி, சண்டை, குருவுக்குச் சந்திரன் மறைதல், உரோகிணி நட்சத்திரம். [1, 3, 4: ஶகடம்—ஸ. அக. 2: தெலுங்கு வழக்கு. ஜகடமு.]

அகடு—வயிறு, நடு, உள். [1, 2: சூடா. xi, க, 10. 3: பிங். vii, 60.]

அகணி—உள்ளிட்டது, மருதநிலம். [1: பிங். vii, 60. 'உள்.' 2: திவா. v, 84.]

தகடு—பொன் முதலியவற்றால் இலைபோலாக்கியது, இலைபோன் றது, இலை. [1: அக. 'இலைத்தட்டு'. 2: பிங். x, 565. 'ஐம்மை'. 3: பிங். x, 565.]

*பகடு*—பெருமை, யானை, எருமைக்கடா, தெப்பம், ஓடம், பேரெருது. [1, 2: *பிங்.* x, 712. 3: *திவா.* iii, 22. 4: *திவா.* vii, 218. 5: *திவா.* vii, 217. 6: *பிங்.* x, 712. 'பேரெருது'.]

24. *மகதி பெரிது நாரதயாழ் கிசிதன் வாசவன் றிருமால் [செப்பும்*
*சிகதை யோர்நோய் சருக்கரைவெண் மணலம் மணற்சேர் தறை*
*குகநங் குரூர மெலிபாம்பாம் குகனை பொறாமை படிற்றொழுக்கம்*
*குகரங் கூழங் கைதொளை பகனோ ரக்கன் குபேரனினன்.*

*மகதி*—பெரிது, நாரதன்யாழ். [1: மஹதீ—ஸ. அக. 2: வீணாபேதேऽபி மஹதீ—அ. கொ. III, iii, 69. வீணாபேதோ நாரதீ வீணா என்பது மகேசுவரர் டீகை.]

*கிசிதன்*—இந்திரன், திருமால். [நூலில் எவ்விடத்தும் எதுகைக் கலப்பில்லை யாகையால் கிசிதன் என்பது சிகிதன் என்பதற்கு எழுதுவோரால் நேர்ந்த பிழையாதல் வேண்டும். 1, 2: விகிச என்னுஞ் சொல் அறிவுடைய, பிரகாசிக்கின்ற என்னும் பொருளுடையதாக ஸ. அக. யிற் காணப்படுகிறது.]

*சிகதை*—ஓர் நோய், சர்க்கரை, வெண்மணல், வெண்மணற்றரை. [1, 3, 4: ஸிகதா: ஸ்யுர்வாலுகாயாம் ஸிகதா மேஹபேதே ருஜி—அ. ஸ. iii, 303, 2: ஸிகதா...ஶர்க்கராயாம்—நா. ஸ. iii, 167.]

*குகநம்*—குரூரம், எலி, பாம்பு. [1: குஹநம் 'பொறாமை, வஞ்சம்'—ஸ. அக. 2: குஹநோ மூஷிகே—வை. 258, 46. 3: குஹந:—ஸ. அக.]

*குகனை*—பொறாமை, படிற்றொழுக்கம். [1, 2: குஹநா த்ருஹ்யாமீர்ஷ்யாயாமபி—மே. ந, 52.]

*குகரம்*—குள்ளமான கை, துளை. [1: குஹர—ஸ. அக. 2: குஹரம்...பிலே—அ. ஸ. iii, 532.]

*பகன்*—ஓர் அரக்கன், குபேரன், சூரியன். [1, 2: பகஸ்து ... ஸ்ரீதே ச ராக்ஷஸே—மே. க, 30. 3: ஹம்ஸ:... ஸூர்ய...—நா. ஸ. ii, 37.]

25. *நகரம் புரமூர் கைந்நகப்பேர் நகுலி மாஞ்சி குக்குடியாம்*
*மகிஷி யரச மாதெருமை மகிளை யரிவைப் பெண்ஞாழல்*
*முகிரன் மூர்க்கன் காமுகனும் நிகிர்தன் பீடிப் பவன்கபடி*
*நிகிர்தி கபடங் கபடியறுத் திடல்தள் ளுதல்நிந் தையுமாமே.*

*நகரம்*—பட்டணம், ஊர், கைந்நகம். [1, 2: நகரீ—ஸ. அக. 3: நவர:—அ. கொ. II, vi, 83.]

நகுலி — சடாமாஞ்சி, இலவமரம். [1, 2: நகுலீ கடுகுஷ்டீ ஶாலமல்யோ:—சு. வ. iii, 650.]

மகிஷி—அரச மாது, பெண்ணெருமை. [1, 2: மஹிஷீ ந்ருபயோஷிதி; ஸைரிபஸ்த்ர்யாம்—சு. வ. iii, 734, 735.]

மகிளை—அரிவைப்பெண், ஞாழல். [1, 2: மஹிலா நாரீப்ரியங்க்வோ:—சு. வ. iii, 670.]

முகிரன்—மூர்க்கன், காமுகன். [1, 2: முகிரோ மூர்க்காமயோ:—சு. வ. iii, 589. காமன்—மன்மதன். ஏனைக் கோசங்களினு மிதுவே. காமுகன் என்னும் பொருள் ஸ. அக. யிலுங் காணப்படவில்லை.]

நிகிர்தன்—பீடிப்பவன், கபடி. [1: நிக்ருத: ஶாட்ய வ்ருத்த:—சு. கோ. III, i, 41. 2: நிக்ருதஸ்த்வ நிருஜு: ஶட:—சு. கோ. III, i, 46.]

நிகிர்தி—கபடம், கபடி, அறுத்திடல், தள்ளுதல், நிந்தை [1, 2, 4, 5: நிக்ருதிஸ்த்ரநே க்ஷேபே வஞ்சனே ஶாட்யயோ:—வி. ஞ. த, 165. 3: நிக்ருந்—ஸ. அக.]

26. எகினங் கவரி மாப்புளிமாப் புளியாண் மாமோ திமம்நாயாம்
சிகுரம் பதற்ற மனைக்கிரி சிரோரு கங்கட் செவிவெற்பு
பகுலை பசுக்கார்த் திகையேலம் பகுளம் கறுப்புக் கனல்பலவாம்
சிகுவை சுவாலை நாவாக்கு வெகுரூ பன்மால் சிவன்காமன்.

எகினம்—கவரிமா, புளிமா, புளி, ஆண்மரம், அன்னப்பறவை, நாய். [1, 5, 6: திவா. xi, 254. 2-4: பிங். x, 191.]

சிகுரம்—பதற்றம், மனைக்கிரி, தலைமயிர், பாம்பு, மலை. [1-5: சிகுரோ ஸஹஸ க்ருஹபக்ஷௌ கேஶே பர்வதேபீ:—சு. வ. iii, 548.]

பகுலை—பசு, கார்த்திகை, ஏலம். [1-3: பஹுலா கவ்யாம் பஹுலா: க்ருத்திகா ஸ்வபி—ஶா. கோ. 16.]

பகுளம்—கறுப்பு, நெருப்பு, பல. [1-3: பஹுல: ... க்ருஷ்ண... ஸ்வமிதே பஹௌ—வை. 261, 122.]

சிகுவை—சுவாலை, நா, வாக்கு. [1-3: ஜிஹ்வா வாக்ரஸநா ஜ்வாலா—நா. ர. ii, 429.]

வெகுரூபன்—திருமால், சிவன், மன்மதன். [1-3: பஹுரூபோ விஷ்ணௌ... ஸ்மரே—வி. ஞ. வ, 21.]

27. சகத்து வாயு வுலகப்பேர் நிகர்த்த லொத்தல் சமர்செய்தல்
அகப்பா மதிலுண் மேடைமதி லகற்ற னீக்க லகலித்தல் [லுமாம்
தொகுத்த லீட்டல் தொகைசெய்தல் சுருக்கல் தொகுதி செய்த
[தலே.
அகைத்த லறுத்த லுலைப்புய்த்த லடித்த லொடித்த லுயர்த்து

சகத்து—வாயு, உலகம். [1, 2: ஜமஜாவஹ்ரா ஸதா வாயௌ விஷ்வெ—வி. வ்ர. த, 139.]

நிகர்த்தல்—ஒத்தல், போர்செய்தல். [1, 2: அக.]

அகப்பா—மதிலுள் மேடை, மதில். [1, 2: பிங். x, 1.]

அகற்றல்—நீக்கல், அகலமாக்கல். [1, 2: அக.]

தொகுத்தல்—ஈட்டல், தொகைசெய்தல், சுருக்கல், தொகுதி செய்தல். [1-4: அக.]

அகைத்தல்-அறுத்தல், உலைப்பு, உய்த்தல், அடித்தல், ஒடித்தல், உயர்த்துதல். [1: திவா. ix, 101. 2: திவா. ix, 134. 3: சூடா. ix, 44. 4: திவா. ix, 254. 5: திவா. ix, 25. 6: சூடா. xi, க, 7.]

28. விகங்கம் புள்ளோ டிமமம்பா மகண்டங் கண்ட மிலதெல்லாம்
சிகண்ட மயிற்சூட் டதின்ரேகை திகம்ப ரம்மம் மணமிருட்பேர்
[ரோன்
சிகண்டி மயில்குக் குடம்பாலைத் திறத்தோர் பண்வீட் டுமற்செற்
[கே.
பகன்றை சிவதை கிலுகிலுப்பை சகுந்தம் பறவைப் பொதுக்கழு

விகங்கம்—பறவை, அன்னம், அம்பு. [1, 3: விஹஜௌ வஹ்ஸாயகௌ—நா. ர. iii, 67. 2: பிங். viii, 1.]

அகண்டம்—கண்ட மில்லாதது, எல்லாம். [1: அவண்ட— ஸ. அக. 2: அவண்டு—அ. கோ. III. i, 65.]

சிகண்டம்—மயிற்சூட்டு, மயிற்ரேகை. [1, 2: ஶிவண்டா வர்ஹ-சூடயோ:—அ. ஸ. iii, 176.]

திகம்பரம்—அம்மணம், இருள். [1, 2: திமம்பரஸ்து ... ; அந்தகா-ரே...ஸ்ராஸ்வதரஹிதேதஸ்வி ச—அ. ஸ. iv, 257, 258.]

சிகண்டி—மயில், கோழி, பாலைத்திறத்து ஓர் பண், வீட்டுமனைக் கொன்ரோன். [1, 2, 4: ஶிவண்டீ க்க்குடெ...வர்ஹி ..., பீஷ்மாரௌ—அ. ஸ. iii, 418. 3: பிங். vi, 280.]

பகன்றை—சிவதை, கிலுகிலுப்பை. [1: பிங். ix, 249. 'சிவேதை'. 2: பிங். ix, 233.]

சகுந்தம்—பறவைப் பொது, கழுகு. [1, 2: ஶகுந்தோ விஹகே பாஸே—ச. வ. iii, 296.]

29. சகசரிபொற் குறிஞ்சிசகி கூடச்சஞ் சரிப்பாள்
சகநமரைத் தலமகளி ரின்பினரைப் புறமாம்
நிகடநிக ளஞ்சாணைக் கல்லுரைகல் லருகு
நிகளங்கால் விலங்கியானைக் கிடுசங்கி லிப்பேர்
ககநமறி யக்கூடா ததுதுக்கம் படைவிண்
காடுபுகக் கூடாத தகாதபிலக் குகையாம்
நிகமம்வழி கடைத்தெருநிச் சயம்வேதம் நகரம்
ஞெகிழிகாற் சிலம்புநெருப் புறுவிறகு நெருப்பே.

சகசரி—பொற்குறிஞ்சி, சகி, கூடச்சஞ்சரிப்பவள். [1: பீதா குரண்டகோ ... ஸஹசரீ : — ச. கோ. II, iv, 75. 2, 3: ஸஹசரீ —ஸ. அக.]

சகநம்—அரைத்தலம், மகளிரின் பின்அரைப்புறம். [1, 2: ஶ்ரோணிஹாஸ்த்ரீயா: பஶ்சாத் ஜகநம் ஜகநம் கடி:—ஶா. கோ. 429. பஶ்சாந்நிதம்ப: ஸ்த்ரீகட்யா: க்லீபே து ஜகநம் புர:—ச. கோ. II, vi, 74. மூலம் 'முனரைப்புறம்' என்றிருந்ததோ?]

நிகடம்—நிகளம், சாணைக்கல், உரைகல், அருகு. [1: நிகல: (அடுத்த சொல்). 2, 3: நிகஷ: ஶாணபலகே—ச. வ. iii, 731. 4: ஸமீபே நிகட:—ச. கோ. III, i, 66.]

நிகளம்—கால் விலங்கு, யானைக்கிடு சங்கிலி. [1: நிகல:—ஸ. அக. 2: ஶ்ருங்கலே, ... நிகலோऽஸ்த்ரீ — ச. கோ. II. viii, 41.]

ககநம்—அறியக்கூடாதது[1], துக்கம்[2], படை[3], ஆகாசம்[4], காடு[5], புகக்கூடாதது[6], அகாதபிலக்குகை[7]. [1: கஹநம் — ஸ. அக. 2, 5-7: கஹநம் வநது:கயோ:, கஹ்வரே கலிலே வாச்யவத்—ச. வ. iii. 362. 3: அக. 4: ககநம் ... வ்யோம—ச. கோ. I, ii, 1.]

நிகமம்—வழி, கடைத்தெரு, நிச்சயம், வேதம், நகரம். [1-5: நிகம: பதி: ... வேதநிஶ்சயாத்வணிக்ஷ்வபி: —ச. வ. iii, 459.]

ஞெகிழி—காற்சிலம்பு, நெருப்புறு விறகு, நெருப்பு. [1, 2: பிங். x, 563. 3: பிங். i, 44.]

30. அகமிடமுள் ளிராகதுவே டாதிமந மனைவெற்
பரவுதரு நானெனலான் மாப்பாவந் துன்பம்
பகமுயற்சி புகழறங்கொக் கிச்சைவைராக் கியம்வை
பவம்வீர்யம் ஞானமுத்தி யோனிசிவ மல்லி
சிகரமர நுனிபுளக மலையுச்சி யுயர்ச்சி
சிரசுமா துளவிதைநேர் மாமணித்துண் டப்பேர்
தகர்கிடாய் சுறுமீனுண் குஞ்சரம்யா ளியினுண்
சகலமெல்லா மரவுரிதுண் டந்தோலுஞ் சாற்றும்.

அகம்—இடம்[1], உள்[2], இராகதுவேடமுதலியன[3], மனம்[4], வீடு[5], மலை[6], பாம்பு[7], மரம்[8], நானெனல்[9], ஆன்மா[10], பாபம்[11], துன்பம்[12]. [1, 9, 10: ஸ. அக. 2, 4, 5: பிங். x, 2. 6-8: அகம: ...பொலெ ஊுாசெ... வவநாமனெ — வி. வு. ம, 2. 3, 11, 12: அவம ...வஸ்னெ வெருாதவேம வாதகஉ:வயொ:—வி. வு. வ, 1.]

பகம்—முயற்சி[1], புகழ்[2], அறம்[3], கொக்கு[4], இச்சை[5], வைராக்கியம்[6], வைபவம்[7], வீர்யம்[8], ஞானம்[9], முத்தி[10], யோனி[11], சிவமல்லி[12]. [1-3, 5-11: ஐம: ... ஜுாந ... யமொவெவராமஜெக்ஷ, வீராவுாய-தெஹா ... யமொெஸுாயொநிஷ — அ. ஸ. ii, 36. 4, 12: பகொ ... ஶிவமஹீபகொடியொ:— அ. ஸ. ii, 12.]

சிகரம்—மரநுனி, புளகம், மலையுச்சி, உயர்ச்சி, தலை, மாதுள விதை போன்ற பெரிய மணித்துண்டம். [1-4, 6: ஶிவஶ பஜகாமு-யொ:, வகஊாவிஉவீஜாஹரோணிகஸுகமெஙவி உ; வுகூாமெு வஸ-தாமெு உ— அ. ஸ. iii, 604, 605. 5: பிங். v, 336.]

தகர்—கிடாய், சுறுமீன், ஆண்யானை, ஆண்யாளி. [1-4: துருவாடும் வேழமும் யாளியுஞ் சுறவும், தகரெனு நாமஞ் சாற்றப் பெறுமே—பிங். viii, 254. ]

சகலம்—எல்லாம், மரவுரி, துண்டம், தோல். [1: ஸமஹு ஸகலஂ — அ. கொ. III, i, 65. 2-4: ஶகலஂ ... , வஸ்ெ தஹ் வெணு உ — அ. ஸ. iii, 678.]

31. சகளம்நீ லாம்பரம்வெள் ளாட்டாண்கள் ளருண்டை
தணியற்பிட் டுருப்படஞா மத்தைமருட் காரை
சிகிகேதுக் கோளெருது குதிரைசூட் டுளது
சேவன்மயில் விருக்கமம்பு தீயெனவொன் பான்பேர்

*பரிவர்த்தம்*—யுகமுடிவு, தோற்ருேடுகை, பண்டமாற்றுகை. [1-3: வரிவர்த்த... வராயநே, ய்மாநே விநிமயெ வ — ச. வ. iv, 120.]

*பரிவர்த்தன்*—கூர்மாவதாரம், ஓடிப்போய்ப் பதுங்கினேன். [1, 2: வரிவர்த்த கூர்மாநெ வராயநே—ச. வ. iv, 120.]

*பரிவு* — இன்பம், வருத்தம், அன்பு. [1, 2: திவா. xi, 159. 3: சூடா. xi, ர, 36.]

*பரிவேடம்* — சூழ்வது, ஊர்கோள். [1, 2: வரிவெஷ: வரிவூ-தெள வரியெள — ச. வ. iv, 319. ]

638. *திரிகூடம் சுவேல வெற்பிந் துப்புமுச் சிகர வெற்பாம்*
*பரிதாக முடைத்தா சொன்றற் கொன்றைமாற் றுதல்கௌ பீநம்*
*நிரியாண மரணம் யானைக் கடைக்கண்போ குதலே மோக்கம்*
*மரியாதை நியாய மெல்லை கடற்கரை நிலைமை மன்னும்.*

*திரிகூடம்*—சித்திரகூட மலை, இந்துப்பு, மூன்று சிகரமுடைய மலை. [1, 2: த்ரிகூடம் வீநயவணெ த்ரிகூடஸ் வவெமகெ — ச. வ. iii, 151. 3: திரிகூடாசலமென்று பொதியில்மலையில் திருக்குற்ருலத்தருகிலுள்ள பகுதி யொன்றிற்குப் பெயர் வழங்குகின்றது. அங்கு மூன்று சிகரங்கள் உண்டென்றுரைப்பர். மூன்று சிகரமுடைய மற்றை மலைகளுக்கும் அது பெயராகும் போலும்.]

*பரிதாகம்* — உடைத்தூசு, ஒன்றற்கு ஒன்றை மாற்றுதல், கௌபீனம். [1: சந்தரீயொவவஸவ்ர நவரியாநா நமியொர்க்ஸகெ — ச. கொ. II, vi, 117. 2: வரிதாநம் வரீவர்த்த:—ச. கொ. II, ix, 80. 3: வரியாநழ உள்ளுடையென்னும் பொருளில் கௌபீனத்துக்கு மாயிற்றுப்போலும்.]

*நிரியாணம்*—மரணம், யானைக்கடைக்கண், போகுதல், மோக்கம். [1: நிர்யாணம் ... மரணெ — நா. ர. iii, 131. 2-4: நிர்யாணம் நிர்கமெ மொக்ஷமஜாவாங்கவூஜெமயொ: — ச. வ. iii, 200.]

*மரியாதை*—நியாயம், எல்லை, கடற்கரை, நிலைமை. [1: வமஸா தடிரஸ்ரா யாரணா ஸ்திதி: — ச. கொ. II, viii, 26. மகேசுவரர் உரையில் 'வர்த்தாரி நர்யாயமாஸ்தெ:' என்றுரைக்கப்பட்டது. 2, 4:

தீரா ஸ்த்ரிஸ்ரியோ: —ஈ. ஸ. iii, 329. 3: தீரா—ஸ. அக. 'கரை' யென்னும் பொருள் காணப்படுகிறது. நதிக்கரை, ஏரிகரை, கடற்கரை எல்லாவற்றிற்கும் ஒக்கும்.]

639. அருவுரு வன்மை புண்ணும் அருள்க்ருபை பொருளின் சத்தி
உருநிற முருவ மட்டை செபவுரு வகல மும்பேர்
திருவெழில் செல்வஞ் செல்வி சிறந்தது தெய்வ வுத்தி
தெருவென்ப வழிவீ திப்பேர் தெருள்தெளி வறிவு மாமே.

அரு — உருவன்மை, புண். [1: அக. ரூபே. 2: வ்ரண: ... ரூப:—ஈ. கொ. II, vi, 54.]

அருள்—கிருபை, பரம்பொருளின் சத்தி. [1, 2: சூடா. xi, க, 10.]

உரு—நிறம், உருவம், அட்டை, செபவுரு, அகலம். [1-3: சூடா. xi, ர, 32. 4: அக. 5: உரோவிஶாலம்—ஈ. கொ. III, i, 61.]

திரு — அழகு, செல்வம், திருமகள், சிறந்தது, தெய்வவுத்தியென்னும் அணி. [1: அக. 2: பிங். vii, 10. 3, 4: சூடா. xi, ர, 36. 5: பிங். vi, 100.]

தெரு—வழி, வீதி. [1: பிங். iv, 32. 2: திவா. v, 128.]

தெருள் — தெளிவு, அறிவு. [1: பிங். vii, 29. 2: பிங். vii, 8. 'தெருட்சி' என்பதற்கே அறிவென்பது பொருளாகக் கூறப்பட்டது.]

640. அருகன்யோக் கியன்சி னேந்த்ரன் அருகோரஞ் சமீப மென்ப
பருகிதீ மயில்கு சப்புல் பருவர லருவல் துன்பம்
முருகுகள் ளிளமை வாச முற்சவ முருக னும்பேர்
கிருசமே மெலிவோ டற்பங் கிருமிதான் புழுச்செம் பஞ்சாம்.

அருகன்—யோக்கியன், சினேந்திரன். [1, 2: அர்ஹந் ஜிநே(அ)ர்ஹதி வ—வி. வ்ரு. த, 138.]

அருகு—ஓரம், சமீபம். [1, 2: அக.]

பருகி — தீ, மயில், குசப்புல். [1, 3: பர்ஹி: குஶோ(அ)ஹ்நௌ —ஈ. ஸ. ii, 572. 2: மயூரோ ... பர்ஹீ — ஈ. கொ. II, v, 30.]

பருவரல்—அருவல், துன்பம். [1, 2: அ. வி. நி. 408.]

முருகு—கள், இளமை, வாசம், உற்சவம், முருகன். [1-5: திவா. xi, 355.]

கிருசம்—மெலிவு, அற்பம். [1, 2: க்ருஶ:—ஸ. அக.]

கிருமி—புழு, செம்பஞ்சு. [1, 2: க்ருமி: க்ருமிவர்ணாக்ஷாயாம் கீடே —சு. வ. ii, 312.]

641. உருசியே கிரணங் காந்தி சுவையிச்சை மிகப்பற் றும்பேர்
பருடமே சிக்குப் பற்றி யதுபல நிறங்கொ டுஞ்சொல்
இருடிமா முனிவன் வேத மிருதயம் மனம்நெஞ் சவ்வூன்
சுருதங்கேட் பதுநூ லென்ப துருவித்தன் வறிஞன் றுட்டன்.

உருசி—கிரணம், காந்தி, சுவை, இச்சை, மிகப்பற்று. [1, 2, 4, 5: ருசிர்ப்ரபாரெள; ஸ்வாதாவபிலாஷெஸாஸவு — சு. வ. ii, 57, 58. 3: அக. ருசி:.]

பருடம் — சிக்குப்பற்றியது, பல நிறம், கொடுஞ்சொல். [1: பருஷ:—ஸ. அக. 2, 3: பருஷ: கர்புரோ ஜ்ஞேய: பருஷம் நிஷ்டுரம் வச:—ஶா. கோ. 516.]

இருடி—மாமுனிவன், வேதம். [1, 2: ஜுஷிர்வெதெ ஶ்ருதெள — சு. வ. ii, 545.]

இருதயம் — மனம், நெஞ்சு, நெஞ்சின் ஊன். [1-3: ஹ்ருதயம் வக்ஷஸி ஸ்வாந்தெ வ்ருக்காயாம்—சு. வ. iii, 506.]

சுருதம்—கேட்பது, நூல். [1, 2: ஶ்ருதமாகர்ணிதெ ஶாஸ்த்ரே —சு. வ. ii, 201.]

துருவித்தன்—வறிஞன், துட்டன். [1, 2: துர்விதோ துர்ஜநே நி:ஸ்வெ—சு. வ. iii, 336.]

642. திருதராட் டிரமூக் குக்கால் கரியவோ திமப்பாம் பென்ப
பொருநர்போர்த் தலைவர் வீரர் பூபாலர் சமர்த்தர் கூத்தர்
சருவகன் பிரான்ம கேசன் சருவரி யிரவு மஞ்சள்
உருவரை பயிரெல் லாமுண் டாகிலம் பூமி யும்பேர்.

திருதராட்டிரம்—மூக்குங் காலுங் கரிய அன்னம், பாம்பு. [1, 2: த்⁴ருதராஷ்ட்ர: பதே ஸர்ப்பே—ஸ. ஸ. iv, 262. 1: தா⁴ர்தராஷ்ட்ரா: ஸிதே-தரை:—அ. கோ. II, v, 24. 'ஸிதேதரை: க்ருஷ்ணவர்ணை: சஞ்சு-சரணைருபலக்ஷிதாஸ்தே தா⁴ர்தராஷ்ட்ரா: ஸ்யு:. த்⁴ருதராஷ்ட்ரே ப⁴வா:. "த்⁴ருதராஷ்ட்ர: ஸுராஜ்ஞி ஸ்யாத் தக்ஷிகாத்⁴ரியஹேஹயோ:" இதி ரப⁴ஸ:' என்பது மகேசுவரர் டீகை.]

பொருநர்—போர்த்தலைவர், வீரர், அரசர், சமர்த்தர், கூத்தர். [1, 2, 5: திவா. xi, 341. 3: சூடா. ii, 12. 4: அக. 'திண்ணியர்'.]

சருவகன்—பிரான், சிவன். [1, 2: ஸர்வஸ்தா விபௌ⁴ ராஜ்ஞி—ஸ. ஸ. iii, 122.]

சருவரி — இரவு, மஞ்சள். [1: ஶர்வரீ; நிஶா — அ. கோ. I, iv, 3, 4. 2: ஶர்வரீ ஸ்யாத் ஹரித்³ராயாம்—வை. 281, 9.]

உருவரை—பயிரெல்லா முண்டாகும் நிலம், பூமி. [1, 2: உர்வரா ஸ்யாத் ஸம்பி⁴ன்னோர்வ்யாம் ஸர்வஸஸ்யாட்⁴யபூ⁴மாவபி—ஸ. ஸ. iii, 519.]

643. கருவியைம் பொறிதொ டர்ச்சி கவசம்வாத் தியாதி பஞ்சக்
கருவியா யுதமே கங்கல் லணையுப கரண மீட்டம்
எருவையே கொறுக்கை கோரை கழுகுசெம் பிரத்த மென்ப
உருளைதே ருருளுண் டைப்பேர் உருள்பண்டி யுரோணி தேர்க்
கால்.

கருவி—ஐம்பொறி[1], தொடர்ச்சி[2], கவசம்[3], வாத்திய முதலிய பஞ்சக்கருவி[4], ஆயுதம்[5], மேகம்[6], கல்லணை[7], உபகாரணம்[8], ஈட்டம்[9]. [1: அக. 2-9: திவா. xi, 265.]

எருவை—கொறுக்கை, கோரை, கழுகு, செம்பு, இரத்தம். [1, 3, 4: பிங். x, 193. 2, 5: சூடா. xi, ர, 29.]

உருளை—தேர் உருள், உண்டை. [1, 2: அக.]

உருள்—பண்டி, உரோகணி நட்சத்திரம், தேர்க்கால். [1: திவா. vii, 151. 2: திவா. i, 80. 3: சூடா. vii, 44.]

644. மிருகயு நரிவே டன்பேர் விரைவிதை வாசஞ் சாந்தாம்
குருசில்மன் னவன்சி றந்தோன் குரையொலி யசைச்சொ லென்ப
சருமந்தோற் பலகை தோலாம் சரைநரை யோர ரக்கி
கருள்கறுப் பிருள்காங் காடை கரையெல்லை யருகு தீரம்.

மிருகயு—நரி, வேடன். [1, 2: ம்ருகயு: ... மோஷயந்வஹ்ரய-யோரவி—வி. ஹ. ய, 99.]

விரை—விதை, வாசம், சாந்து. [1: அக. 2, 3: திவா. xi, 222.]

குருசில்—மன்னவன், சிறந்தோன். [1: திவா. ii, 19. 2: திவா. ii, 15.]

குரை — ஒலி, ஓர் அசைச்சொல். [1: திவா. xi, 94. 2: தொல். சொல். 272.]

சருமம்—தோற்பலகை, தோல். [1, 2: சர்ம ஸஹஸ்ரசந்த்ரம் —ஶா. கோ. 649.]

சரை—நரை, ஓர் அரக்கி. [1: ஸஹிதம் ஜரஸா ஶௌக்லம் கேஶாஜௌ விஸ்ரஸா ஜரா—க. கோ. II, vi, 41. ஸம்ஸ்கிருதத்தில் ஜரா கிழப்பருவத்தை மாத்திரமே குறிக்கும். அது நரையையுங் குறித்தல் தமிழ்வழக்கு. 2: ஸ. அக. (மஹாபாரதம்).]

கருள்—கறுப்பு, இருள், காங்குப்புடைவை. [1: திவா. viii, 53. 2: பிங். i, 91. 3: திவா. vii, 275-ல் கருள் நல்லாடையின் பெயராகப் படிக்கப் பட்டுளது. பிங். சூடா. இச் சொல்லைத் தாவில்லை.]

கரை — எல்லை, அருகு, நீர்க்கரை. [1: நிக. 359. 2: அக. 3: திவா. v, 45.]

[பண்டம்

645. பொருள்பண முதன்மை பிள்ளை யுண்மைசொற் பொருள்பல்
இரைசில விலங்கூண் புள்ளூண் புவிநீர்கள் ளொலிவாக் கென்ப
சிரையோட முடம்பி னாடி திரையல்வெற் றிலைதி ரங்கல்
நிரைபசுப் படைவகுப்போ ரசைபசுத் திரளி ணைப்பாம்.

பொருள்—பணம், முதன்மை, பிள்ளை, உண்மை, சொற்பொருள், பல்பண்டம். [1, 3-6: சூடா. xi, ர, 11. 2: அக.]

இரை—சில விலங்கூண்[1], பறவையூண்[2], பூமி[3], நீர்[4], கள்[5], ஒலி[6], வாக்கு[7]. [1, 2: திவா. vi, 118. 3-5, 7: இரா ஸுராவாக்ஸு—க. கோ. III, iii, 175. 6: திவா. x, 174.]

சிரை—ஓடம், உடம்பின் நாடி. [1, 2: ஸிரா நாட்யம்புவாஹினீ —க. ஸ. ii, 457.]

திரையல்—வெற்றிலை, திரங்கல். [1: சூடா. iv, 37. 2: அக.]

திரை—பசு, படைவகுப்பு, ஓர் செய்யுளசை, பசுத்திரள், இணைப்பு. [1: சூடா. iii, 12. 2, 3: அக. 4: சூடா. iii, 13. 5: அக. 'ஒழுங்கு.']

646. புரையென்ப வுவமை குற்றம் புழையோர்சிற் றில்லு யர்ச்சி
வரையள விரேகை மூங்கில் நீர்க்கரை மலையென் றைம்பேர்
கரைதல்வர வெனலொ லித்தல் கசிதல்சொல் லுதலி ரங்கல்
வரைதலே கொள்ள னீக்கல் மணஞ்செய லெழுது தற்பேர்.

புரை—உவமை, குற்றம், புழை, ஓர் சிற்றில், உயர்ச்சி. [1, 2, 5: திவா. xi, 337. 3, 4: சூடா. xi. ர, 27.]

வரை—அளவு, இரேகை, மூங்கில், நீர்க்கரை, மலை. [1-3, 5: பிங். x, 1005. 4: திவா. v, 45.]

கரைதல்—வரவெனல், ஒலித்தல், கசிதல், சொல்லுதல், இரங்கல். [1, 4: திவா. xi, 72. 2: சூடா. xi, ண, 8. 3, 5: அக.]

வரைதல்—கொள்ளல், நீக்கல், மணஞ்செயல், எழுதுதல். [1, 2: திவா. xi, 207. 3: அக. 4: திவா. vii, 305.]

647. முரண்வலி பகைபோர் முப்பேர் முருக்கல்கொல் லுதல ழித்தல்
உரியரைப் படிநார் தோலாம் உருத்தல்சீ றுதல்மு ளைத்தல்
பரிகம்பம் பயம்ந டுக்கம் பரித்தலே சுமத்த லோம்பல்
கரவென்ப களவொ ளிப்பு கரிப்பென்ப கார்ப்பச் சப்பேர்.

முரண்—வலி, பகை, போர். [1, 2: திவா. xi, 193. 3: திவா. ix, 147.]

முருக்கல்—கொல்லுதல், அழித்தல். [1: திவா. ix, 106. 2: அக.]

உரி—அரைப்படி, நார், தோல். [1: நா. தீ. நி. 802. 2: அக. 3: திவா. iii, 126.]

உருத்தல்—சீறுதல், முளைத்தல். [1, 2: திவா. xi, 43.]

பரிகம்பம்—பயம், நடுக்கம். [1, 2: வபிகமெ்ா ஸயெ கமெ்—வி. வ்ரு. வ, 25.]

பரித்தல்—சுமத்தல், ஓம்பல். [1: பிங். vii, 220. 2: அக.]

கரவு—களவு, ஒளிப்பு. [1: திவா. ix, 21. 2: அக.]

கரிப்பு—கார்ப்பு, அச்சம். [1: அக. 2: திவா. viii, 168.]

648. திரிசிக முடித்ரி சூலம் திருக்குக்கண் பார்ப்போன் குற்றம்
பிருதியே விலைகூ லிப்பேர் பிருட்டம்பிந் தினது வென்னும்
இருபிறப் பண்ட சம்பல் விருக்கையூ ரிருப்பி டப்பேர்
உருமமத் தியான்னம் வெம்மை யுருக்குமம் பொன்னு ருக்கே.

திரிசிகம் — கிரீடம், திரிசூலம். [1, 2: த்ரிஶிகம் ஸ்ரீதக்ரீடே-த்ரிஶூலயோ:—ந. வ. iii, 103.]

திருக்கு—கண், பார்ப்போன், குற்றம். [1: நயநம் ... த்ருக்—அ. கோ. II, vi, 93. 2: த்ருக் 'த்ருக்த்ருஶ்யவிவேக:' முதலிய தொடர்களில் இப் பொருளைத் தரும். 3: அக.]

பிருதி—விலை, கூலி. [1, 2: ப்ருதிர்மூல்யே ஹரணயோ: — ந. வ. ii, 182.]

பிருட்டம்—பிந்தினது, முதுகு. [1, 2: ப்ருஷ்டம் வஸ்துநிசாதௌ ஸ்ரீதாத்வாவயவாந்தரே—ந. வ. ii, 106.]

இருபிறப்பு — பறவை, பல். [1, 2: சூடா. xi, ர, 28. த்விஜந்தா வௌரஜே—ந. வ. iii, 375.]

இருக்கை—ஊர், இருப்பிடம். [1: திவா. v, 92. 2: அக.]

உருமம்—மத்தியான்னம், வெம்மை. [1: பிங். ii, 127. 2: பிங். vii, 105.]

உருக்குமம்—பொன், உருக்கு. [1, 2: ருக்மம் லோஹே ஸுவர்ணே ச—ந. வ. ii, 327.]

649. அரத்தநி சிறுவி ரன்மட் டாமுழ முழங்கை யும்பேர்
இரத்தந்தாம் பிரஞ்சிந் தூரம் செந்நீர்குங் குமமா மென்ப
பிரத்தம்வெற் பின்மேல் வட்டச் சிலாதல மளக்கும் நாழி
பிரத்தர மரத்த நங்கல் குசப்புல்லா தியின்ப டுக்கை.

அரத்நி — சிறுவிரல் மட்டாம் முழம், முழங்கை. [1, 2: அரத்நி: கஃபோணே வாணௌ ஸப்ரகோஷ்டததாங்குலௌ—ந. வ. iii, 349.]

இரத்தம் — தாம்பிரம், சிவப்பு, செந்நீர், குங்குமம். [1-4: ரக்தம் நவ்யம்ஸகம் ப்ராசீரே குங்குமே தாம்ரே ..., ...; ... லோஹிதே—நா. வ. i, 135.]

பிரத்தம் — மலையின் மேல்வட்டச் சிலாதலம், அளக்கும் நாழி. [1, 2: ப்ரஸ்தஸ் ஸாநுமாநயோ: — க. கோ. III, iii, 87.]

பிரத்தரம்—இரத்தினம், கல், குசப்புல் முதலியவற்றின் படுக்கை. [1, 2: ப்ரஸ்தரோऽச்ம மணி:—வெ. 243, 102. 3: ப்ரஸ்தர:—க. கோ. III, iii, 161. 'ப்ரஸ்தரா பல்லவாதிரசித்ரயநா வா' என்பது மகேசுவரர் டீகை.]

650. சிரத்தலே யொலித்தல் தேய்த்தல் சிரத்தைநம் பிக்கை யிச்சை
பிரப்பொவ்வோர் பாண்டத் துட்பல் லுணப்பெய்விப் பனபேருண்டி
சரித்தல்சஞ் சரித்தல் சாய்த்தல் தரித்தலே சுமத்தல் தங்கல்
விரித்தல்சொல் லுதல லர்த்தல் விளக்குதல் விரிவாக் கற்பேர்.

சிரத்தல்—ஒலித்தல், தேய்த்தல். [1: அக. திவா. x, 172, சூடா. x, 46 இரண்டு நிகண்டுகளிலும் சிரற்றல் என்னும் சொல்லே காணப்படுகின்றது. 2: பிங். vii, 365.]

சிரத்தை—நம்பிக்கை, இச்சை. [1, 2: ச்ரத்தா ஸ்ப்ருஹா ... — க. ஸ. ii, 248.]

பிரப்பு—குறுணிவீதம் பாண்டங்களுட் பல்லுணவு பெய்துபாரிப்பது, பேருண்டி. [1: திவா. vi, 58. 2: பிங். vi, 53.]

சரித்தல்—சஞ்சரித்தல், சாய்த்தல். [1: நா. தீ. நி. 733. வர். 2: அக.]

தரித்தல்—சுமத்தல், தங்கல். [1: பிங். vii, 220. 2: அக.]

விரித்தல்—சொல்லுதல், அலர்த்தல், விளக்குதல், விரிவாக்கல். [1: திவா. x, 1. 2: விரிதல்-அலர்தல்—திவா. ix, 199. விரித்தல் இதன் பிறவினை. 3, 4: அக.]

651. துருக்கம்வெற் பரண்வ னங்கத் தூரிகுங் குமங்க லக்கம்
பெருக்கமே நிறைவு செல்வம் விசாலமெண் பெருக்கு வ்ருத்தி
வருக்கமே யினம்வ குப்போ டொத்தவோர் வகைத்தி ரட்பேர்
பெருக்கலெண் ணுறழ்ச்சி சீத்தல் நிறைத்திடல் பெருகச்செய்தல்.

துருக்கம்—மலையரண், வனம், கத்தூரி, குங்குமம், கலக்கம். [1: துர்க்கம் — க. கோ. II, viii, 17. 'துர்க்கம் துர்க்கஸ்தாநம், வநதுர்க்கம்' என்பது மகேசுவரர் டீகை. 2: துர்க்கம் ... வநே — நா. ஸ. i, 94. 3: சூடா. xi, ர, 25. 4: பிங். x, 628. 5: துர்க்கம்— ஸ. அக.]

பெருக்கம் — நிறைவு, செல்வம், விசாலம், எண்பெருக்கு, விருத்தி. [1: திவா. viii, 40, 'பெருகல்'. 2: திவா. viii, 240. 3, 4: அக. 5: பிங். vii, 471.]

வருக்கம்—இனம், வகுப்பு, ஒத்த ஓர்வகைத் திரள். [1: வர்கூ: — ஸ. அக. 2: வர்கூ: வரிஹெஉ ... — ஶ்ரீ. பெ. III, ii, 24. 3: வர்கஸூ ஸஉ௺ஶாஂ ஃஙெண — வெ. 186, 8.]

பெருக்கல்—எண் உறழ்ச்சி, சீத்தல், நிறைத்திடல், பெருகச்செய்தல். [1: அக. 2: நா. தீ. நி. 709. 'சீய்த்தல்'. 3: நிறைந்திடல் - பெருகுதல்—சூடா. viii, 15. இது அதன் பிறவினை. 4: 'பெருகல்' என்பதன் பிறவினை.]

652. மருச்சக னிந்தி ரன்றீ மருச்சுத னநுமன் வீமன்
அருச்சுந மருது வெண்மை கண்ணோய்பொன் மயில்புல் லாகும்
அருச்சுநன் கார்த்த வீரி யன்பார்த்த னொருதாய்க் கோர்சேய்
அருச்சுநி பசுத்தொ ழுத்தை யோர்நதி யுஷையு மாமே.

மருச்சகன்—இந்திரன், அக்கினி. [1, 2: மரூத்ஸவ: —ஸ. அக.]

மருச்சுதன்—அநுமன், வீமன். [1, 2: மரூத்ஸுத:—ஸ. அக.]

அருச்சுநம் — மருது, வெண்மை, கண்ணோய், பொன், மயில், புல். [1-3, 5, 6: அர்ஜுநஂ த்ருணெ வரிெத; நேத்ரரோகெஸ்ர்ஜுந: ... கெகிநி ஊ்ரூெ — அ. வ. iii, 344, 345. 4: அர்ஜுந: ..., ... ஹேஹி — வெ. 257, 9.]

அருச்சுநன் — கார்த்தவீரியன், பார்த்தன், ஒருதாய்க்கு ஓர் பிள்ளை. [1-3: அர்ஜுந: வார்ஜூ ஹைஹயெ ..., மாதுரேகவுதெ — அ. வ. iii, 345.]

அருச்சுநி—பசு, தொழுத்தை, ஓர் நதி, உஷை. [1-4: அர்ஜுநீ ஷா ஸௌ: குட்டநீ ஸரிக—அ. வ. iii, 345.]

653. திருட்டணை யாசை தாகம் திருட்டாந்த முதார ணம்நூல்
விருட்டிணி சந்தி ரன்யா தவன்மேடம் பாஷண் டன்பேர்
விருத்தன்மூப் பினன்கற் றோனு மிருத்தியு மரணங் காலன்
விருத்தாந்தம் செய்தி யெல்லாம் விதம்பிர காரணம் வார்த்தை.

*திருட்டணை*—ஆசை, தாகம். [1, 2: த்ருஷ்ணா ஸ்ப்ருஹாபிபா-ஸெ ஜெ—ஞ. கொ. III, iii, 51.]

*திருட்டாந்தம்*—உதாரணம், நூல். [1, 2: த்ருஷ்டாந்த: ஸ்யாது-தாஹரணெ, ஶாஸ்த்ரெ—ஞ. ஸ. iii, 259.]

*விருட்டிணி* — சந்திரன், யாதவன், ஆடு, பாஷண்டன். [1-4: வ்ருஷ்ணிஸ்து யாதவெ மேஷெ பாஷண்டெ ஹிமதீதிதௌ — நா. ர. ii, 123.]

*விருத்தன்*—கிழவன், கற்றோன். [1, 2: வ்ருத்த: ப்ராஜ்ஞெ ஸ்தவிரெ ச—ஞ. ஸ. ii, 247.]

*மிருத்தியு*—மரணம், காலன். [1, 2: ம்ருத்யுர்ந்நா மரணெ யமெ —மே. ய, 46.]

*விருத்தாந்தம்*—செய்தி, எல்லாம், விதம், பிரகரணம், வார்த்தை. [1: வ்ருத்தாந்த:—ஸ. அக. 2-5: வ்ருத்தாந்த: ஸ்யாத்ப்ரகரணெ ப்ரகாரெ கார்த்ஸ்ந்யவார்த்தயொ: —ஞ. கொ. III, iii, 63.]

654. கிருத்திரிம மொருவ ராற்செய் கின்றது வெடியுப் பாதி
துருத்திநீர்ச் சிவிறி யாற்றி னிடைக்குறை தோற்று ருத்தி
அருப்பகன் வறிஞன் பால னறிவிலான் மூர்க்க னென்றும்
தருப்பணம் பிதிர்ம கங்க ணடிசமித் துகப்புச் செய்தல்.

*கிருத்திரிமம்* — ஒருவராற் செய்கின்றது, வெடியுப்பு முதலியன. [1, 2: க்ருத்ரிமம் லவணபேதெ க்ருத்ரிம: க்ருத ... — ஞ. ஸ. iii, 455.]

*துருத்தி*—நீர்ச்சிவிறி, யாற்றின் இடைக்குறை, தோல், துருத்தி. [1: அக. 'நீர்சிதறுந் துருத்தி'—பிங். vi, 611. 2, 3: பிங். x, 629. 4: ஊதுந் துருத்தி, மட்டத் துருத்தி—அக.]

*அருப்பகன்*—வறிஞன், பாலன், அறிவிலான், மூர்க்கன். [1-4: அர்ப்பகஸ்து க்ருஶெ பாலெ மூர்க்கெ ஜடெ — நா. ர. iii, 35, 36.]

தருப்பணம்—பிதிர்யஞ்ஞம், கண்ணாடி, சமித்து, உகப்புச்செய்தல். [1: தர்ப்பண—ஸ. கொ. II, vii, 14, 'தர்ப்பணம் பித்ருணாமந்நோதகாதிநா த்ருப்திஸம்பாதநம் ஸ பித்ருயஜ்ஞ:' என்பது மகேசுவரர் டீகை. 2: தர்ப்பண: —ஸ. கொ. II, vi, 140. 3, 4: தர்ப்பணம் த்ருப்திஸமிதோ: —நா. ர. iii, 133.]

655. இரவிராத் திரியி ரப்பா மிரந்திரந் தொளைசு ருங்கை [முட்டி
பிரியைபெண் பிரிய முள்ளாள் பிரம்போர்பைங் கொடிதேர்
தெரிதலா ராய்தல் காணல் செருந்தியோர் மரம்வாட் கோரை
மருமமே கபட மார்பாம் வரம்பொழுங் கணைமட் டென்ப.

இரவு—இராத்திரி, இரப்பு. [1: திவா. i, 117. 2: திவா. ix, 89.]

இரந்திரம்—துளை, சுருங்கை. [1, 2: ரந்த்ர ... ஸுஷிரஸந்த்ரயோ: —நா. ர. ii, 353.]

பிரியை—ஸ்திரீ, பிரியமுள்ளாள். [1, 2: ப்ரியா—ஸ. அக.]

பிரம்பு—ஓர் பைங்கொடி, தேர்முட்டி. [1: பிங். ix, 235. 2: பிங். vi, 382.]

தெரிதல்—ஆராய்தல், காணல். [1: திவா. ix, 73. 2: நிக. 344. 'தெரியல்.']

செருந்தி — ஓர் மரம், வாட்கோரை. [1: பிங். ix, 43. 2: பிங். ix, 346.]

மருமம் — கபடம், மார்பு. [1: வழக்கு. மர்ம - இரகசியம்—ஸ. அக. 2: திவா. ii, 181.]

வரம்பு — ஒழுங்கு, அணை, எல்லை. [1: அக. 2: பிங். iv, 126. 3: திவா. viii, 79.]

656. குரங்கமான் மிருக சாதி குரங்குதல் குனிதல் கோணல்
அரங்கவைக் களஞ்சூ தாடற் கமைத்திடு மறையுள் வீடாம்
இரஞ்சகம் பிரியஞ் செஞ்சாந் திரண்டையே யெலியால் கைம்மை
குரண்டகம் பொற்கு றிஞ்சி பொன்வாடா மலருங் கூறும்.

குரங்கம்—மான், மிருகசாதி. [1: குரங்க:—ஸ. கொ. II, v, 8. 2: குரங்க:—ஸ. அக.]

குராங்குதல்—குனிதல், கோணல். [1: அக. 2: சூடா. xi, ர, 39. ‘குராங்கு’.]

அரங்கு — அவைக்களம், சூதாடற்கு அமைத்திடும் அறை, உள் வீடு. [1, 2: ரங்க:—ஸ. அக. 3: சூடா. xi, ர, 38.]

இரஞ்சகம்—பிரியம், செஞ்சாந்து. [1, 2: ரஞ்ஜநம் ரஞ்ஜகே ரக்த-சந்தநே(அ)ஸ்த்ரீ—ஸ. ஸ. iii, 395.]

இரண்டை—எலியால், கைம்பெண். [1, 2: ரண்டா மூஷிகப-ர்ண்யாம் ச ரண்டா விதவயோஷிதி—வி. ரு. ட, 23.]

குரண்டகம்—பொற்குறிஞ்சி, பொன்வாடாமலர். [1: குரண்டக:—அ. கோ. II, iv, 75. ‘யா பீதபுஷ்பா ஜிண்டீ ஸா குரண்டக இத்யு-ச்யதே’ என்பது மகேசுவரர் டீகை. 2: குரண்டக: — அ. கோ. II, iv, 74. ‘தத்ராம்லாநே பீதவர்ணே குரண்டக இத்யேகம்’ என்பது மகேசுவரர் டீகை. ‘பொன்வாடாக்குறிஞ்சி’ என்பது தமிழுரை.]

657. வரண்டகஞ் சுவரு ருண்டை முகப்பரு மதமா மெத்தை
கரண்டைதா பதங்கற் பாழி கரம்பைவண் டலின்மண் ஞாழல்
குரம்புசெய் கரைவ ரம்பாம் குரம்பையே யுடல்சிற் றில்லாம்
நரம்பென்ப வோர்மெய்த் தாது நாணியாழ்த் தந்தி ரிப்பேர்.

வரண்டகம் — சுவர், உருண்டை, முகப்பரு, யானைமேலிடு மெத்தை. [1-4: வரண்டகஸ்து ப்ராகாரே கஜவேத்யாம் யௌவநகண்டகே, ஸம்-வர்த்தே ச ஹிதேத்ரௌ ச—ஸ. ஸ. iv, 32.]

கரண்டை — முனிவர் வாசம், கற்புழை. [1: திவா. v, 185. 2: திவா. v, 30.]

கரம்பை—வண்டல்மண், ஞாழல். [1: அக. 2: ]

குரம்பு—செய்கரை, வரம்பு. [1: பிங். iv, 163. 2: சூடா. v, 32. ‘நிலவரம்பு.’]

குரம்பை—உடல், சிற்றில். [1: பிங். v, 269. 2: பிங். iv, 220.]

நரம்பு—ஓர் மெய்த்தாது, வில்நாண், யாழ்த்தந்திரி. [1: பிங். v, 266. 2: பிங். vi, 436. 3: பிங். vi, 333.]

658. பிரக ரணமா யுதஞ்சமயோ சிதம்போ ரடித்தல் பிரகாரம்
பிரச லாக மயிற்றோகை வில்லாச் சிரமம் பாம்பும்பேர்
சரசி சரச முளோன்பொய்கை சரிமார்க் கங்கை வளையொப்பாம்
இரசை பங்கம் பாளைபுவி யானை வணங்கி தினைநாவே.

பிரகரணம் — ஆயுதம், சமயோசிதம், போர், அடித்தல், பிரகாரம். [1: ஆயுஃயம் த்ஃ ப்ரஹரணம் — க. கோ. II, viii, 82. 2, 5: ப்ரகரணம்—ஸ. அக. 3: யுஃஜெ ப்ரஹரணம்—வெ. 273, 16. 4: ப்ரஹரணம்—ஸ. அக.]

பிரசலாகம்—மயிற்றோகை, விற்பயிற்சி, பாம்பு. [1-3: ப்ரஸலா-கொ ஹஃஜஜெ, ஶராஸநெ ஶிக்ஷணெ ச—க. ஸ. iv, 18.]

சரசி—சரசமுளோன், பொய்கை. [1: ஸரஸிந்—ஸ. அக. 2: ஸரஸீ—வெ. 154, 11.]

சரி—வழி, கைவளை, ஒப்பு. [1: பிங். iv. 32. 2: பிங். vi, 77. 3: அக. நி. 89.]

இரசை—பங்கம்பாளை, பூமி, ஆனைவணங்கி, தினை, நா. [1-5: ரஸா த்ஃ ஸஊவீராஜிஹ்வாயாரணிகஜஃஷஃ—வி. ப்ர. ஸ, 2. 3: மஜஹகூரா ... ரஸா—க. கோ. II, iv, 123.]

659. அரண மரித்தல் கவசமதில் காவல் புயஞ்சீ தனப்பொருள்வேல்
தரண னிரவி வெற்பரையன் சரபம் வரையா டெண்காற்புள்
பிரணி தாநஞ் சமாதாந முத்தி யோகம் பிரயோகம்
வாத னென்ப பிரசங்கன் சாந்த சித்தன் வரமருள்வோன்.

அரணம்—அரித்தல்[1], கவசம்[2], மதில்[3], காவல்[4], புயம்[5], சீதனப் பொருள்[6], வேல்[7]. [1, 5, 6: ஹரணம் யௌதகஃப்ரவெ ஹஃஜெஃவீ ஹரணம் ஹரெதௌ—வி. ப்ர. ண, 47. 2, 3: திவா. xi, 12. 4: திவா. ix, 208. 7: திவா. vii, 13.]

தரணன்—சூரியன், இமவான். [1: யரண:—ஸ. அக. 2: தரணம் இமயமலை யென்று அகராதியிற் காணப்படுகிறது. தாங்குவதென்னும் பொருளை யுடைய யரண: என்பதே அப்பொருளையுந் தந்ததுபோலும்.]

சரபம்—வரையாடு, எண்காற்புள். [1: திவா. iii, 32. 2: ஶரஹஸ்ஃ ... கஷ்டபாதவீ—வெ. 67, 64.]

*பிரணிதாநம்* — சமாதானம், உத்தியோகம், பிரயோகம். [1-3: ஷுணியாநஉஹியொமெ ஸஊயாநஷுவெஸமெயா: — சு. ஸ. iv, 180. ஆசிரியர் கொண்டது நிர்ணயஸாகரப் பதிப்பில் காணும் 'ஷுயொமயொ:' என்னும் பாடபேதம்போலும்.]

*வரதன்* — பிரசன்னன், சாந்த சித்தன், வரமருள்வோன். [1, 2: வரஉ: வாு:; ஷுஸமெ ஶாநஹிமெ வ — சு. ஸ. iii, 330, 331. 3: வரஉஸு ஸஊகஃ:—சு. கொ. III, i, 7.]

660. பிரதி யுருளின் விளிம்பிற்சுற் றிரும்புப் பட்டம் பிறிதும்பேர்
பிரதி கிருதி பிறிதுருவம் பிறிது செய்கை பூசனையாம்
பிரதி சிரையம் வீடுசவை கருவிச் சாலை யிருப்பிடமாம்
பிரதி பத்தி கூர்த்தமதி யொழுக்கம் பேறு கனமுடைமை.

*பிரதி*—உருளின் விளிம்பிற் சுற்றும் இரும்புப் பட்டம், பிறிது. [1: 2: ]

*பிரதிகிருதி* — பிறிதுருவம், பிறிதுசெய்கை, பூசனை. [1-3: ஷுதிகுதிஸு வுஜமெ; ஷுதிஊயாஂ ஷுதீகாரெ — சு. ஸ. iv, 117, 118.]

*பிரதிசிரையம்*—வீடு, சபை, கருவிச்சாலை, இருப்பிடம். [1, 2: ஷுதிஶுய: ஸஹெளகஸொ:—சு. ஸ. iv, 225. 3: 4: ஸ்ரீாஉாஶு-யெSவி ஷுதிஶுய: —வி. ஷு. ய, 107.]

*பிரதிபத்தி*—கூர்த்தமதி, ஒழுக்கம், பேறு, கனமுடைமை. [1-4: ஷுதிவதிஸு மெளரவெ, ஷுாமெளெ ஷுவுமெளெ ஷுாமஹெ —சு. ஸ. iv, 118.]

661. பிரதி மாக மநுருபம் யானைக் கொம்பி னடுவும்பேர்
பிரபு இறைவ னதிகாரி பிரதே சங்கா ணிக்கைகொடை
குரமே பரிமா வாதியின்காற் குளம்புஞ் சிறுகா குணமும்பேர்
திரவம் பரிகா சம்பிசின்யாத் திரைகெட் டோட விலைச்சாறும்.

*பிரதிமாகம்*—அநுருபம், யானைக் கொம்பின் நடு. [1, 2: ஷுதிஊ-நஂ ஷுதிவிமெ மஜஉநஉயாநெர—சு. ஸ. iv, 183.]

*பிரபு*—இறைவன், அதிகாரி. [1, 2: ஂரஂஶுர: ...; ... ஷுஸு: ... கூயிவ: — சு. கொ. III, i, 10, 11.]

*பிரதேசநம்* — காணிக்கை, கொடை. [1: ப்ரதேசநீ — அ. கோ. II, viii, 27. 'ப்ராப்ருதம் ப்ரதேசநம் ... ஷட் ந்யாயவத்க்ராஹ்ய-த்ரவ்யாணி தேஸ ஸம்ப்ரோக்தாநி வஸ்தூநி:' என்பது மகேசுவரர் டீகை. 2: ப்ரதேசநீ— ஸ. அக.]

*குரம்* — குதிரை முதலியவற்றின் குளம்பு, சிறுநாகுணம். [1, 2: க்ஷுர: ஸபெ கோகண்டகெ — அ. ஸ. ii, 398. சிறுநாகுணம் 'சங்குநக' மென்றும் கூறுவர்.]

*திரவம்*—பரிகாசம், பிசின், யாத்திரை, கெட்டோடல், இளைச்சாறு. [1-5: த்ரவோ வித்ரவநர்மணோ:; ப்ரத்ராவெ ரஸநிர்யாஸே— அ. ஸ. ii, 511, 512.]

662. *பிரகீர் ணகஞ்சொல் லின்விரிவு சாம ரம்பாய் மாவும்பேர்*
*பிரசா பதிபா வகன்றுவட்டா வேந்தன் பிரம னிரன்மருகன்*
*பிரசா வதிமைத் துனிகொழுந்தி பிரதா பன்ப்ர சித்தனிரன்*
*பிரசூ மாதா பெண்குதிரை பிரசூ நம்ப்ர சவங்காய்பூ.*

*பிரகீர்ணகம்* — சொல்லின் விரிவு, சாமரம், குதிரை. [1-3: ப்ரகீர்ணகம் விஸ்தரெ; சாமரெ ... துரங்கெ — அ. ஸ. iv, 18, 19.]

*பிரசாபதி* — அக்கினி, துவட்டா, அரசன், பிரமன், சூரியன், மருகன். [1-6: ப்ரஜாபதிர்வஹ்நௌ த்வஷ்டரி ந்ருபெ தாதரி விவஸ்வதி, வஹ்ந-த்வஷ்டரி—அ. ஸ. iv, 117.]

*பிரசாவதி*—மைத்துனி, கொழுந்தி. [1, 2: ப்ரஜாவதீ ப்ராத்ருஜாயா—அ. கோ. II, vi, 30. தமையன் மனைவி மைத்துனி, தம்பி மனைவி கொழுந்தி.]

*பிரதாபன்* — பிரசித்தன், சூரியன். [1, 2: ப்ரதாபவாந் ப்ரதாபவாந் ததீ—உ. கோ. 543. அன்விகுதி பெற்ற பெயர் இரண்டையும் உடையார்க்குப் பெயராயிற்று.]

*பிரசூ* — மாதா, பெண்குதிரை. [1, 2: அஸ்வாயாம் மாதரி ப்ரஸூ: —பா. கோ. 715.]

*பிரசூநம்* — பிரசவம், காய், பூ. [1-3: 𑌪𑍍𑌰𑌸𑍂𑌨𑌂 𑌵𑌾𑌽𑌭𑍍𑌯𑌵𑌜𑌾𑌤𑍇 𑌪𑍍𑌰𑌸𑍂𑌨𑌂 𑌫𑌲𑌪𑍁𑌷𑍍𑌪𑌯𑍋: — வி. ப்ர. ந, 87. பிரசூநம் பிறப்பென்னும் பொருளுடையதாகக் கோசங்களிலும் ஸ. அக. யிலும் காணப்படுகிறது. பிரசவத்திற்கு வழக்கமான பொருள் 'பிறப்பித்தல்'. இப் பொருளும் அக. யில் உண்டு.]

663. **துரக மநமச் சுவமென்ப துருக ணம்முற் கரமழுப்பேர்**
**விரகங் காம நோய்பிரிவாம் மிருக தரன்சந் திரன்பரமன்**
**விரசம் வழியான் றொழுக்கூட்ட மிருது மந்த மெல்லியது**
**சுரசை யரத்தை துளசிப்பேர் துருவல் கடைதல் தேடலுமே.**

*துரகம்*—மனம், குதிரை. [1, 2: 𑌤𑍁𑌰𑌗𑍌 𑌵𑌾𑌜𑌿𑌚𑌿𑌤𑍍𑌤𑌯𑍋: — சு. ஸ. iii, 112.]

*துருகணம்* — முற்காம், மழு. [1, 2: 𑌦𑍍𑌰𑍁𑌘𑌣: 𑌪𑌰𑌶𑍁 ..., 𑌉𑌦𑍍𑌧𑍃𑌲𑍋𑌽𑌪𑌿 — சு. ஸ. iii, 197.]

*விரகம்*—காமநோய், பிரிவு. [1: 𑌵𑌿𑌰𑌹: — ஸ. அக. 'பிரிவால் வரும் காமநோய்.' 2: 𑌵𑌿𑌶𑍍𑌲𑍇𑌷𑍇 ... 𑌵𑌿𑌰𑌹 ... —வெ. 194, 52.]

*மிருகதரன்*—சந்திரன், சிவன். [1: 𑌹𑌰𑌿𑌣𑌧𑌰𑌮𑍃𑌗𑌧𑌰: — த்ரி. ஶே. I, ii, 5. 𑌹𑌰𑌿𑌣𑌧𑌰: 𑌮𑍃𑌗𑌧𑌰: என்பன சந்திரன் பெயர்கள். 2: நிகண்டுகளிற் காணும் சிவன் பெயராகிய 'மான் இடமேந்தி' என்பது 𑌮𑍃𑌗𑌧𑌰: என்பதன் மொழிபெயர்ப்பாகும். ஆயினும் ஸ. அக. கோசங்களில் இப் பொருள் காணப்படவில்லை.]

*விரசம்*—வழி, பசுத்தொழு, கூட்டம். [1-3: 𑌵𑍍𑌰𑌜𑍋𑌽𑌸𑍍𑌤𑍍𑌰𑍀 𑌗𑍋𑌷𑍍𑌠𑌸𑌙𑍍𑌘𑍇𑌷𑍁 — சு. ஸ. ii, 74.]

*மிருது*—மந்தம், மெல்லியது. [1, 2: 𑌕𑍋𑌮𑌲𑌾𑌤𑍀𑌕𑍍𑌷𑍍𑌣𑌯𑍋𑌰𑍍𑌮𑍃𑌦𑍁: —ஶா. கோ. 663. 1: அக.]

*சுரசை*—அரத்தை, துளசி. [1: 𑌸𑍁𑌰𑌸𑌾 — சு. கோ. II, iv, 114. 2: 𑌸𑍁𑌰𑌸𑌾 — ஸ. அக.]

*துருவல்*—கடைதல், தேடல். [1: பிங். vii, 364. 2: சூடா. ix, 36. 'துருவு.']

664. கரடு பரடும் பிணர்க்கணுவும் கருமான் கொல்லன் புல்வாயாம்
வரடை யன்னப் பெடைகுளவி வருடை வரையா டெண்காற்புள்
அரலை கழலை மரல்கொட்டை யருளல் கொடுத்த லருள்செய்தல்
பரவல் துதித்தல் பரப்புதலாம் பருண முருக்குப் பலாசமிலை.

கரடு—பரடு, சருச்சரை, மரக்கணு. [1: பிங். v, 273. 2, 3: அக.]

கருமான்—கொல்லன், ஆண்மான். [1: அக. 2: பிங். viii, 190.]

வரடை—அன்னப்பெடை, குளவி. [1, 2: வரடா ஹம்ஸயோஷிதி; மதுநாஶ்ராஜ —க. வ. iii, 159, 160.]

வருடை — வரையாடு, எண்காற்புள். [1: திவா. iii, 32. 2: பிங். viii, 17.]

அரலை—கழலை, மரல், கொட்டை. [1, 3: திவா. xi, 13. 2: பிங். ix, 220.]

அருளல்—கொடுத்தல், அருள்செய்தல். [1: திவா. ix, 81. 2: அக.]

பரவல்—துதித்தல், பரப்புதல். [1: திவா. x, 18. 2: திவா. viii, 30. 'பரப்பு.']

பருணம்—முருக்கு, பலாசம், இலை. [1, 3: வர்ணம் ஸ்ராத்ரம்ஸ்தகெ வதே — வி. வ்ரு. ண, 14. 2: 'பலாசம்' முருக்கு இலை யென்னும் இரண்டு பொருள்களோடு ஸமீ மரத்தையும் குறிக்கும். வர்ண: வஜாமெ ஸ என்பது க. வ. நிர்ணயஸாகரப் பதிப்பில் பாடபேதமாகக் காட்டப் பட்டது.

665. தரிநற் றுகிலா திகளின்பேடகமுன் றுனை குகையோடம்
திரிக மும்மை முதுகெலும்பின் கீழ்முக் கூடல் முச்சந்தி
சுரிகை கவச முடைவாளாம் சொரித லுதிர்தல் பொழிதற்பேர்
அரிசந் தநமோர் தேவதரு மிகநன் மணச்சந் தநமாமே.

தரி—நற்றுகில் முதலியவற்றின் பேடகம், முன்றுனை, குகை, ஓடம். [1, 2, 4: தரிஸ்ஸாயாம் வெஹாயாம் வஸ்த்ராதீநாம் வ வெடிகெ—க. வ. ii, 415. 3. த்ரீ த்ஸ கந்தரெ—க. வ. ii, 419.]

திரிகம்—மும்மை, முதுகெலும்பின் கீழ், முக்கூடல், முச்சந்தி. [1: த்ரிகம் ... த்ரயெ—வி. வ்ரு. க, 46. 2: வ்ருஷ்டவம்ஸாயரெ த்ரிகஷ

—க. கொ. II, vi, 76. 3: த்ரிகஷயாணாம் ஸஹஸ்ர வ—நா. ர. ii, 12. 4: த்ரிக:—ஸ. அக.]

சுரிகை—கவசம், உடைவாள். [1: திவா. vii, 36. 2: திவா. vii, 18. ஊருரிகா—க. கொ. II, viii, 92. ]

சொரிதல்—உதிர்தல், பொழிதல். [1: அக. 2: திவா. ix, 164.]

அரிசந்தநம்-ஓர் தேவதரு, மிகநன்மணச் சந்தனம். [1: பஞ்சைதே தேவதரவோ மந்தார: பாரிஜாதக:, ஸந்தாந: கல்பவ்ருக்ஷஸ்ச பும்ஸி வா ஹரிசந்தநம்—க. கொ. I, i, 53. 2: மலயாஜோ மலயஜோ ஸுக்ஷ்ம சந்தநோ மலயாவ்யம், தைலபர்ணிகோ கோஸீர்ஷ ஹரிசந்தநமவ்யயம்—க. கொ. II, vi, 131. ‘தைலபர்ணிகமித்யாதிகம் பஞ்சகம் சந்தநவிஸேஷஸ்ய. கோஸீர்ஷமித்யாதிகம் உத்தமசந்தநஸ்ய. ஹரிசந்தநமித்யாதிகம் கபிலவர்ண சந்தநஸ்ய. ஸர்வம் த்ரயோ ஹேது:’ என்பது மகேசுவரர் டீகை.]

666\. பரிசம் நோயொற் றுள்வேலை தொடுதல் வருக்க வெழுத்தீகை
இரிணம் பாழோ டுவர்த்தரையா மிரிதல் முறிதல் கெடுதற்பேர்
அரிதம் பசும்புற் றரைபசுப்பா னதுபைம் புரவி திசைபசுமை
திரிதல் சுழலல் சஞ்சரித்தல் செல்லல் கெடுதல் வேறுதல்.

பரிசம்—நோய், ஒற்றுள் வேலை, தொடுதல், வருக்கவெழுத்து, ஈகை. [1, 3-5: ஸ்பர்ஸோ ரூக்ஸ்பர்ஸோ பாதே ஸ்பர்ஸநே ... ரஞ்ஜி—க. ஸ. ii, 542. 2: ஸ்பஸ: - ஒற்றுள் — ஸ. அக. அவன் வேலை பரிசம் எனப் பட்டது போலும்.]

இரிணம்—பாழ், உவர்த்தரை. [1, 2: இரிணம் ஸூந்யமூஷரம்—க. கொ. III, iii, 56, வியாக்கியாஸுதைப் பாடம். ‘ஊஷரவி’ என்றொரு குறிப்பும் காணப்படுகிறது. இப் பாடத்தையே (ஊஷிணம்) ஆசிரியர் கொண்டார்போலும்.]

முரிதல்—முறிதல், கெடுதல். [1: பிங். vii, 153. 2: பிங். vii, 154.]

அரிதம் — பசும்புற்றரை, பசுப்பானது, பைம்புரவி, திசை, பசுமை. [1: பிங். iv, 173. 2: பிங். vii, 174. பசப்பு-பொன்மை. ‘பசப்பு’ தெலுங்கு வழக்கு. 3-5: ஹரித்ஹரி ...; வர்ணேஸ்வே ச—க. ஸ. ii, 207, 208.]

திரிதல்—சுழலல், சஞ்சரித்தல், செல்லல், கெடுதல், வேறுதல். [1: சூடா. ix, 41. 2, 4: சூடா. xi, ம, 5. 3: பிங். vii, 447. 5: வேறுபாடு-திரிபு—திவா. ix, 138.]

667. பரித லொடிதல் தொலைத்தல்துயர்ப் படல்வெட் டுதலன் புறலிரங்
பரிவா ரம்வா ளுறை சத்ர சாம ராதி பரிசனப்பேர் [கல்
பருக மயிலின் றோகைபரி வாரம் பச்சைப் புல்லிலையாம்
மிருகம் விலங்கு மான்மும்மீன் வேட்ட மிரத்தல் கயபேதம்.

பரிதல்—ஒடிதல், தொலைத்தல், துயர்ப்படல், வெட்டுதல், அன்புறல், இரங்கல். [1-3: அக. 4: திவா. ix, 111. 5, 6: சூடா. xi, ர, 8.]

பரிவாரம்—வாளுறை, சத்திரம் சாமரம் முதலியன, பரிசனம். [1-3: ஸஹ்ராஜ்ஜுஜெ வரீவாரஃ வஜுகொரெ வரிஜுஷெ — ஃ. கொ. III, iii, 168. ‹ஜஜுஜெ ஜஜுஜவிஜெஷெ வரிஜஃ ஜதி யாவகூ› என்பது மகேசுவரர் டீகை.]

பருகம் — மயிலின் தோகை, பரிவாரம், பச்சைப்புல், இலை. [1, 2, 4: வஹு: வஹெ வரீவாரெ கூஜாவெ—ஃ. ஸ. ii, 586. 3: வஹி: ... கூவெஶ—வெ. 234, 105.]

மிருகம் — விலங்கு, மான், மிருகசீரிட நட்சத்திரம், வேட்டம், இரத்தல், யானைவகை. [1-6: ரூஃ: கூமஜெ யாவுாயா ரூமயாயா மஜாநூரெ, வமெஶ நக்ஷத்ரஜெஷெ வ—ஃ. ஸ. ii, 41.]

668. பிருகு சுங்கன் றாழ்வரையோ ரிருடி பிகாகி யமதங்கி
இருசு பண்டி யுள்ளிரும்பு செவ்வை பிறப்பில் லாமையுமாம்
தருண மிளமை யாமணக்குச் சமையம் புதுமை குச்சமலர்
கிருதம் முதலாம் யுகம்நெய்நீர் செயப்பட் டதுசி கிற்சைபலன்.

பிருகு — சுக்கிரன், தாழ்வரை, ஓர் இருடி, சிவன், ஜமதக்கினி. [1, 2, 4, 5: ஹுகுஃ ஸாநெள ஜஜுஷி ..., ஶுக்ரெ ரூஜெ வ — ஃ. ஸ. ii, 39. 3: ஹுகுஃ—ஸ. அக.]

இருசு — பண்டியுள்ளிரும்பு, செவ்வை, பிறப்பில்லாமை. [1: திவா. vii, 152. 2: ஊஜுஃ—ஃ. கொ. III, i, 72. 3: ]

தருணம் — இளமை, ஆமணக்கு, சமயம், புதுமை, குச்சமலர். [1, 2, 4, 5: தருணஃ கூஜவஷெ ஸஹ்ராஷெணெ யுவநி நூதநெ—ஃ. ஸ. iii, 195. 3: அக.]

கிருதம்—முதலாம் யுகம், நெய், நீர், செய்யப்பட்டது, சிகிற்சை, பலன். [1, 4, 6: க்ருதம் யாமெஸ்வி ... விஹிதெ ... ஹமெ—வி. வை. த, 3. 2, 3: வ்ருதகோஜஸ்ரும் வ்ருதம் ஜலம்—ஸா. கொ. 632. 5: ]

669. மருதம் நாடு சார்ந்தநில மந்நி லப்பண் வயல்மருது
சுருதி வேதஞ் செவிகேட்டல் வார்த்தை சங்கி தச்சுதியாம்
திருதி சுகந்தா ரணைவேள்வி மகிழ்வோர் யோகந் தைரியப்பேர்
நிருதி மூகடி யோர்வள்ள லோர்திக் கிறைநி ருபத்திரவம்.

மருதம்—நாடுசார்ந்த நிலம், மருதநிலப் பண், வயல், மருது. [1, 2: திவா. xi, 347. 3, 4: சூடா. xi, ௭, 29.]

சுருதி—வேதம், செவி, கேட்டல், வார்த்தை, சங்கீதச்சுதி. [1-5: ஶ்ருதிஶாஸ்த்ரயவார்த்தயோ:, ஷஜ்ஜாதுருஸ்ஸ்ஜீகாயாம் ச கர்ணாகர்ணநயோ-ரபி—அ. ஸ. ii, 201.]

திருதி—சுகம், தாரணை, வேள்வி, மகிழ்வு, ஓர் யோகம், தைரியம். [1-6: த்ருதிர்ஹர்ஷவிஶேஷெ ஸ்யாத்தாரணாயொஷ்யயொ: ஸ்-வெ, ஸந்தோஷாத்வரயோஸ்த்ராவி—அ. ஸ. ii, 173.]

நிருதி—மூதேவி, ஓர் வள்ளல், தென்மேற்குத்திக்குப் பாலகன், நிருபத்திரவம். [1, 3, 4: நிர்ருதிர்நிருபத்ரவெ, அலக்ஷ்ம்யாம் திக்பதௌ சாபி—அ. ஸ. iii, 263. 2: சூடா. ii, 23.]

670. கருமகரனந் தகன்கூலிக் காரன் வேலை யாள்முப்பேர்
தரும ராசன் முநீந்திரனந் தகன்மூ தற்பாண் டவன்புத்தன்
தருமன் வேள்வி முடித்தானோர் வேந்தன் யமனோர் சாக்கியனும்
துருவன் பரம னுத்தாந பாத சுதனோர் வசுப்பிரமன்.

கருமகரன் — யமன், கூலிக்காரன், வேலையாள். [1-3: கர்மகரோ-ந்தகெ, ப்ருதிஜீவிநி ப்ருத்யெ ச—அ. ஸ. iv, 244.]

தருமராசன்—அருகன், யமன், பாண்டவருள் மூத்தவன், புத்தன். [1: சூடா. i, 5. 2-4: தர்மராஜோ யமெ பாண்டு தர்மராஜோ யுதிஷ்டிரெ—வி. வை. ஜ, 30.]

தருமன்—வேள்வி முடித்தோன், யுதிட்டிரன், யமன், ஓர் சாக்கியன். [1, 3: தர்ம: ..., ... யஜ்வா ... யமெஷு — நா. ர. ii, 283. 2: சூடா. ii, 14. 4: தர்ம: —ஸ. அக.]

துருவன்—சிவன், உத்தானபாதன் மகன், ஓர் வசு, பிரமன். [1, 3: த்⁴ருவ: ... ஶிவ ... வஶௌ — வி. த்ரு. வ, 8. 2: த்⁴ருவ: ..., ... உத்தாநபாத³ஜே — ஸ. ஸ. ii, 515. 4: த்⁴ருவோ தா⁴தா ... — வெ. 233, 87.]

671. தருமம் வேள்வி வேதவிதி யறஞ்சற் சங்கம் நீதிகுண [யாதி
தரும முவமை யியல்பொழுக்கந் தநுக்கொல் லாமை கொடை
பருவஞ் சமயோ சிதம்விழவு வசந்தா திகம்பக் குவமகளிர்
பருவம் பிராயங் காலமுவாக் கணுப்பா ரதத்தின் பிரிவும்பேர்.

தருமம்—யாகம்[1], வேதவிதி[2], அறம்[3], சற்சங்கம்[4], நீதி[5], குண தருமம்[6], உவமை[7], இயல்பு[8], ஒழுக்கம்[9], வில்[10], கொல்லாமை[11], கொடை முதலியன[12]. [1, 7-11: த⁴ர்ம: ... ஸோமபாபாஸ்யயோ: க்ரதௌ, உபமாயாமஹிம்ஸாயாம் சாபே — வி. த்ரு. ம, 17. 2-5, 12: த⁴ர்ம: ..., ஸத்ஸங்கே ... ந்யாயோபநிஷதோரபி; த⁴ர்மம் தாநாதிகே — ஸ. ஸ. ii, 319, 320. 'உபநிஷதி. ஶாஷ த்ரயீத⁴ர்மாத⁴ர்மம் வார்த்தாநா. மர்த்தாநர்த்தௌ ச ஸ்வாத்⁴யாஸ்வஜாபநாஜெளவகாரிக:' என்பது டீகை. 6: குணத்திற்குரிய தருமம்; அரசிற்கு அளியுடைமை போல.]

பருவம்—சமயோசிதம்[1], விழவு[2], வசந்த முதலிய பருவம்[3], பக்குவம்[4], மகளிர் பருவம்[5], பிராயம்[6], காலம்[7], உவா[8], கணு[9], பாரதத்தின் பிரிவு[10]. [1, 2, 8, 9: பர்வ ஸ்ரீத³ப்த்வே ஸூர்யௌ த்ருஷ்டாவே ...; தர்ஶப்ரதிபத்ஸந்தௌ—வி. த்ரு. ந, 118, 119. 3, 5, 6: அக. 4, 7: பிங். x, 762. 10: பர்வ — ஸ. அக.]

672. உரைசொற் பயன்பொன் னுரையொலிசொல் லுரைத்தல் தேய்த்
தல் சொலலொலித்தல்
சுரையான் முலையோர் படர்கொடிகட் கிண்ணி கள்ளுட் டொளை
யைம்பேர்
திரைநீர்த் திரைசிற் றுமல்லி யுடம்பின் றிரைபா றிடுதிரையாம்
நரைவெள் விடைவெண் மயிர்வெண்மை சரையு காற்றேர் நதிமே
கம்.

உரை—சொற்பொருள், பொன்னுரை, ஒலி, சொல். [1: பிங். x, 173. 2: அக. சூடா. vi, 3 'உரை' பொன்னின் பரியாயமென்றது. இன்னும், அந் நிகண்டில் (xi, ர, 32) காணும் 'தேய்தல்' என்னும் பொருள் இங்கு இன்மையின் பொன் உரை என இரண்டு பொருள் கருதப்பட்டனவோ? 3: திவா. x, 174. 4: சூடா. xi, ர, 32.]

*உரைத்தல்*—தேய்த்தல், சொலல், ஒலித்தல். [1: சூடா. ix, 16. 2: திவா. x, 1. 3: திவா. x, 172.]

*சுரை* — பசுவின் முலை, ஓர் படர்கொடி, கட்கிண்ணி, கள், உட்டுளை. [1, 2, 5: பிங். x, 526. 3, 4: ஸுரா மத்யபாத்ரயோ:—ஸ. ஸ. ii, 458.]

*திரை*—நீர்த்திரை, சிற்றுமல்லி, உடம்பின் திரை, பூமி, இடுதிரை. [1: திவா. v, 43. 2, 4: ஸ்ரீரா ஸ்ரு: ஸாமவர்ண்யோ—ஸ. ஸ. ii, 456. 3, 5: நிக. 359.]

*நரை*—வெள்விடை, வெண்மயிர், வெண்மை. [1-3: பிங். x, 677. 'வெள்விடை'. நிக. களில் நரை விடைக்குப் பரியாயமாக வரினும் ஆசிரியர் கருத்து நரை வெள்ளைநிறத் திடபத்தையே குறித்தல்வேண்டும் என்பது போதும்.]

*சரையு* — காற்று, ஓர் நதி, மேகம். [1: ஸரயு: — த்ரி. ஶே. I, i, 75. 2: ஸரயு:, ஸரயூ:—ஸ. அக. 3: ]

673. *மரக்கால் சுவாதி துற்கையின்கூத் தொடுமால் கூத்து மரத்தின் கால்*

*அரக்குச் சிவப்புச் செம்மெழுகாம் அரற்ற லொலித்தல் விடா துரைத்தல்*

*இரட்ட லொலித்த லசைதற்பே ரிரட்டை யிரண்டா னதுமிதுனம்*

*கிரப்பு வறுமை குறைவென்ப கிருத்தங் கூத்தோர் வேதாங்கம்.*

*மரக்கால்* — சுவாதி நட்சத்திரம், துர்க்கையின் கூத்து, திருமால் கூத்து, ஓர் அளவு கருவி. [1, 4: பிங். x, 903. 2: திவா. ix, 227. 3: திவா. ix, 222.]

*அரக்கு*—சிவப்பு, செம்மெழுகு. [1, 2: சூடா. xi, ர, 37.]

*அரற்றல்* — ஒலித்தல், விடாதுரைத்தல். [1: திவா. x, 171. 2: 'அழுதல்' என்னும் பொருளே பிங். vii, 284., சூடா. xi, ர, 37., நிக. 337 முதலிய அனைத்தினும் காணப்படுகிறது. விடாது பேசல்-பிதற்றுதல் — திவா. x, 25.]

*இரட்டல்*—ஒலித்தல், அசைதல். [1: திவா. x, 171. 2: அக.]

*இரட்டை*—இரண்டானது, மிதுன ராசி. [1: அக. 2: திவா. i, 67.]

*கிரப்பு*—வறுமை, குறைவு. [1: திவா. viii, 158. 2: திவா. viii, 67.]

நிருத்தம்—கூத்து, ஓர் வேதாங்கம். [1: ந்ருத்யம்-ந்ருத்தம் பாட பேதம்— ஸ. கொ. I, vii, 10. 2: ஶிக்ஷாத்யாநி ஶ்ருதேரங்கம் — ஸ. கொ. I, vi, 4. 'ஶிக்ஷா கல்போ வ்யாகரணம் நிருக்தம் ஜ்யோதிஷாம் கதி:, சந்தோவிசிதிரித்யேஷ ஷடங்கோ வேத உச்யதே' என்பது மகேசுவரர் டீகையில் எடுத்தாளப்பட்ட மேற்கோள்.]

674. பரிக்கி ரகம்பற் றுதல்மனைவி முதல்பெற் றிடுதல் பரிசனமாம்
திரித்தல் திரிபு செயல்முறுக்கல் தெரித்தல் சொல்ல லெழுதுதற் பேர்
அரித்துப் பசும்புல் பசும்புரவி பசுமை பசுப்புள் ளதுதிசையாம்
அருக்கஞ் செம்பு பளிங்கெருக்காம் அருக்க னிரவிக் திரன்சேட் டன்.

பரிக்கிரகம்—பற்றுதல், மனைவி, முதல், பெறுதல், பரிவாரம். [1-3, 5: பரிக்ரஹ: பரிஜநே பத்ந்யாம் ஸ்வீகாரமூலயோ: — ஸ. வ. iv, 341. 4: பரிக்ரஹ: — வ. அக.]

திரித்தல்—திரிபுசெயல், முறுக்கல். [1: நா. தீ. நி. 764. 2: அக.]

தெரித்தல்—சொல்லல், எழுதுதல். [1: திவா. x, 1. 2: பிங். vii, 366.]

அரித்து—பசும்புல், பசும்புரவி, பசுமை, பசுப்புள்ளது, திசை. [1-3, 5: ஹரிதிஶி த்ருணாந்தரே; வர்ணபேதேऽஶ்வபேதே ச — ஸ. வ. ii, 207, 208. 4: ஹரித— வ. அக. பசுப்புள்ளது பொன்னிறமானதும் பச்சைநிறமானதும் ஆகிய இரண்டையுங் குறிக்கும். மஞ்சள்நிற மென்று பொருள்படும் பஸுபு தெலுங்குச்சொல். அக. பசுமையும் இவ்விரண்டு நிறத்தையுங் குறிக்குமென்னும்.]

அருக்கம்—செம்பு, பளிங்கு, எருக்கு. [1-3: அர்க்கோ த்ருமபேதே ஸ்படிகே தாம்ரே—ஸ. வ. ii, 1.]

அருக்கன்—சூரியன், இந்திரன், தமையன். [1, 2: அர்க்க: ... ஸுரேஶ்வரே விஜௌஜஸி — ஸ. வ. ii, 1. 3: அர்க்க: ... ஜ்யேஷ்டப்ராதரி— நா. ர. ii, 1.]

[வாம்

675. விருச்சி கந்தேள் தேட்கொடுக்குப் புதலோ ரிராசி மயிர்ப்புழு
கிருட்டி யறிஞன் மகஞ்செய்தோன் கேழல் பிரண்டை யோரீற்று
சிருட்டி யியல்பும் படைத்தலுமாம் திருட்டி பார்வை கண்ஞானம்
வருத்த மாசம் நிகழ்கால மகலா மணக்கோர் மாளிகையே.

விருச்சிகம்—தேள், தேட்கொடுக்குப்புதல், ஓர் இராசி, மயிர்ப் புழு. [1-4: வ்ருஸ்சிகஸ்த்வ ஓஷதௌ ராஸாவௌஷதௌ ஸஞ்சுகீடகே —அ. ஸ. iii, 91.]

கிருட்டி — அறிஞன், யாகஞ்செய்தோன், பன்றி, பிரண்டை, ஓரீற்றுப்பசு. [1: யீரஞு ... க்ருஷ்டி: — அ. கொ. II, vii, 6. 2: 3: ஸஞ்சுகரோ வ்ருஷ்டி: — அ. கொ. II, v, 2. 4: அக. 5: க்ருஷ்டி-ஸ்த்வ ஸக்ருத்ப்ரஸூதகவீ ஸவெகஜ — அ. ஸ. ii, 85.]

சிருட்டி—இயல்பு, படைத்தல். [1, 2: ஸ்ருஷ்டி: ஸ்வபாவே நிர்மா-ணே—அ. ஸ. ii, 99.]

திருட்டி — பார்வை, கண், ஞானம். [1-3: த்ருஷ்டிர்ஜ்ஞானேக்ஷ்ணதர்ஸநே—அ. ஸ. ii, 90.]

வருத்தமாகம்—நிகழ்காலம், அகல், ஆமணக்கு, ஓர் மாளிகை. [1: வர்த்தமாநம்—ஸ. அக. 2-4: வர்த்தமாந: ... ஸ்வஸ்திகேரண்ட ...; ... ஸரா-வெ ச—அ. ஸ. iv, 189, 190.]

[வின்

676. அருத்தம் வழக்கம் பொருட்டுவிடை யம்பிர காரம் பொருள்சொல்
அருத்தம் நிவிர்த்தி செம்பாதி பலன்சாத் திரந்துண் டம்பண்டம்
கருப்பம் வயிறு சூல்சந்தி சிசுவுள் வீடு பலாக்காய்முள்
தருப்ப மிருக மதங்கிரந்தங் குசப்பு லகங்கா ரமுஞ்சாற்றும்.

அருத்தம் — வழக்கம்[1], பொருட்டு[2], விடயம்[3], பிரகாரம்[4], பொருள்[5], சொல்லின் அர்த்தம்[6], நிவிர்த்தி[7], சரிபாதி[8], பலன்[9], சாத்திரம்[10], துண்டம்[11], பண்டம்[12]. [1, 10: அர்த்த: ... வ்யவஹாரே ..., ... ஸாஸ்த்ரே—நா. ர. ii, 197. 2-7, 9, 12: அர்த்தோ ஹேதௌ ப்ரயோஜநே; நிவ்ருத்தௌ விஷயே வாச்யே ப்ரகாரத்ரவ்யவஸ்துஷு — அ. ஸ. ii, 208, 209. 8, 11: அர்த்த: ஸண்டேர்த்தம் ஸமம்ஸே—அ. ஸ. ii, 235.]

கருப்பம்—வயிறு, சூல், ஓர் சந்தி, சிசு, உள்வீடு, பலாக்காய்முள். [1-4, 6: கர்ப்ப: குக்ஷௌ ஸிஸௌ ஸந்தௌ ப்ரூணே பநஸகண்டகே —அ. ஸ. ii, 303. 5: கர்ப்ப:—ஸ. அக.]

தருப்பம் — கஸ்தூரி, கிரந்தம், குசப்புல், அகங்காரம். [1, 4: தர்ப்போ ம்ருகமதே தர்ப்ப — அ. ஸ. ii, 292. 2: 3: குஸம் தர்ப்ப: —அ. கொ. II, iv, 166.]

677. பெருகல் வளர்த னிறைதற்பேர் பிருங்க மிலவங் கம்வண்டாம்
குருதி சிவப்புக் குசன்செந்நீர் குருந்து குருத்தோர் மரங்குழந்
மருமான் மருகன் வழித்தோன்றல் மருங்கு பக்க மரியாதை [தை
கருமை கறுப்பும் பெருமையுமாம் கரும்பு புனர்த மோர்பயிரே.

பெருகல்—வளர்தல், நிறைதல். [1: அக. 2: திவா. viii, 40.]

பிருங்கம்—இலவங்கம், வண்டு. [1: ஹ்ருங்க—ஸ. கொ. II, iv, 134. 2: ஹ்ருங்: —ஸ. கொ. II, v, 29.]

குருதி—சிவப்பு, செவ்வாய், இரத்தம். [1-3: பிங். x, 372.]

குருந்து—குருத்து, ஓர் மரம், குழந்தை. [1-3: பிங். x, 373.]

மருமான்—மருகன், வழித்தோன்றல். [1, 2: சூடா. xi, ௭, 12.]

மருங்கு—பக்கம், மரியாதை. [1: திவா. v, 229. 2: அக. 'ஒழுங்கு.']

கருமை—கறுப்பு, பெருமை. [1: திவா. viii, 53. 2: திவா. viii, 20.]

கரும்பு—புனர்பூச நட்சத்திரம், ஓர் பயிர். [1: திவா. i, 83. 2: திவா. iv, 77.]

[ளிப்பு

678. காங்கந் தேங்காய் தலையெலும்பாம் கரப்போர் விட்டில் களவொ
சரண்ட மோர்பூ டணமோந்தி சரத்தோ ரிருது வற்சரப்பேர் [ம்
பொருந்தல் சேர்த லியைதலெனும் புருவை யிளமை செம்மறியா
விருந்து புதிதோர் வனப்பதிதி மிருதஞ் செத்த திரப்பதுமே.

கரங்கம்—தேங்காய், தலையெலும்பு. [1, 2: கரங்கோ ஸேகா-ஸ்தி; நாரிகேலஹமெடஙவி—நா. ர. iii, 18, 19.]

கரப்பு—ஓர் விட்டில், களவு, ஒளிப்பு. [1, 3: அக. 2: திவா. ix, 21.]

சரண்டம்—ஓர் பூடணம், ஓந்தி. [1, 2: ஸரண்ட: ஸ்ரக்ருகலா-வெ ஷ-திஷணாந்ர ... —ஸ. ஸ. iii, 177.]

சரத்து—ஓர் இருது, வருடம். [1, 2: ஶரத்ஸம்வத்ஸரெர ஐதெள —வி. வ்ரு. ௯, 33.]

பொருந்தல்—சேர்தல், இயைதல். [1, 2: அக.]

புருவை — இளமை, செம்மறியாடு. [1: திவா. viii, 203. 2: பிங். viii, 170.]

விருந்து—புதிது, ஓர் செய்யுள்வனப்பு, அதிதி. [1: திவா. viii, 190. 2: தொல். பொ. 551. 3: அக.]

மிருதம்—செத்தது, இரப்பது. [1: ம்ருத: — ஸ. கோ. II, viii, 117. 2: ம்ருதம் யாசிதம் — ஸ. கோ. II, ix, 3.]

679. திரங்கல் மிளகு திரைதலெனும் சிரண்டி யுவதி சுமங்கலப்பெண்
கிரந்தந் தநமெண் ணுன்கெழுத்துக் கவிசொற் றொடுக்கின்
றது நூலாம்
கிரந்தி வளைவு துணியங்க முடைக்கட் டோர்நோய் மரக்கணுப்
கிரந்தி கந்திப் பலிமூலம் துணியங் கங்குற் குலுக்கருவேல். [பேர்

திரங்கல்—மிளகு, திரைதல். [1: பிங். ix, 287. 2: நிக. 340.]

சிரண்டி—யுவதி, சுமங்கலப்பெண். [1, 2: ஸ்ரீ ஸுவா-ஸிநீ; தருணீ வ—ஸ. ஸ. iii, 149, 150.]

கிரந்தம்—செல்வம், முப்பத்திரண்டெழுத்துக் கவி, சொல், தொடுத்தல், நூல். [1, 2, 4, 5: க்ரந்தோ தநே ஸாஸ்த்ர ஸம்-தர்பே—ஸ. ஸ. ii, 211. 3: க்ரந்த: ... வச:—வை. 215, 41.]

கிரந்தி—வளைவு, துணியங்கம், உடைக்கட்டு, ஓர் நோய், மரக்கணு. [1-5: க்ரந்திர்வஸ்த்ராம்ஸே ரோகே கௌடில்யபர்வணோ:, க்ரந்தி தா க்ரந்திபர்ண—ஸ. ஸ. ii, 212.]

கிரந்திகம்—திப்பலிமூலம், துணியங்கம், குற்குலு, கருவேல். [1-3: க்ரந்திகம் பிப்பலீமூலே க்ரந்திபர்ணகஷேஷுஜே; க்ரந்திகோ குக்குலௌ—ஸ. ஸ. iii, 31, 32. 4: ]

680. முரம்பு கழிக்கான் கன்மேடு பரன்மொய்த் துயர்ந்த நிலமும்பேர்
துரிஞ்சில் வவ்வா லோர்மரமாம் சுரும்பு மலையு மாண்வண்டும்
பிருங்க ராசங் கரிசாலங் கண்ணி குடுமிக் கடுவன்புள் [ண்ணே.
சிருங்கி பணிப்பொ னதிவிடைய மெருத்தின் புதல்செங் கயற்பெ

முரம்பு — கழி, காடு, பாறை, மேடு, பரல் மொய்த்து உயர்ந்த நிலம். [1: திவா. v, 50. 2: அக. 'பாலை.' 3, 5: பிங். x, 946. 4: அ. வி. நி. 397.]

துரிஞ்சில்—வவ்வால், ஓர் மரம். [1: நா. தீ. நி. 252. திவா. (iii, 187), பிங். (viii, 70), சூடா. (iii, 65) மூன்றிலும் துரிஞ்சில் ஆலாலமென்றும், வாவலின் பெயர் அஞ்சலிகை யென்று மிருக்கிறது. 2: பிங். ix, 97. 'சீக்கிரி.']

சுரும்பு—மலை, ஆண்வண்டு. [1: சூடா, xi, ம, 8. 2: சூடா. iii, 65.]

பிருங்கராசம் — கரிசாலங்கண்ணி, குடுமிக்கடுவன்புள். [1, 2: ஹ்ருங்ராஜ: ... ஶாகவெ விஹஙாந்தரெ—அ. ஸ. iv, 56.]

பிருங்கி—பணிப்பொன், அதிவிடயம், எருத்தின் புதல், பெண் சேல்மீன். [1-4: ஶ்ருங்கீ ஸுவர்ணநவிஶேஷயோ:; விஷாயாஂ ருஷஹௌஷயஂாஂ—அ. ஸ. ii, 49, 50.]

681. கரகமூர்க் குருவிகமண் டலமோர்புள் ளாலங்
கட்டிபுன்கு தாதுமா தளைகரமென் றேழ்பேர்
கிரகமநுக் கிரகம்விண்மீன் பிசாசாதி நவக்கோள்
கிராணம்போ ரெழுச்சிகைக்கொள் ளுகைபூத னாதி
கிரகரா சன்கிரண மாலியிம கிரணன்
கிரமுகஞ்செவ் வுலோத்திரம்பூ வரசுகமு கென்ப
குரகமெனல் நீர்முள்ளி நெருஞ்சிமஞ்சா டியுமாம்
குரரஞ்செங் காற்கருமூக் கன்னமமு கணிப்புள்.

கரகம்—ஊர்க்குருவி[1], கமண்டலம்[2], ஓர் பறவை[3], ஆலங்கட்டி[4], புன்கு[5], தாதுமாதளை[6], கை[7]. [1-4, 6, 7: கரகொ ஊாஸிஶெ வக்ஷிஹெஷெ கரெ கஶேஷௌ; ஷட்வா ... வஶ்ராவமெ வ — அ. ஸ. iii, 12, 13. 5: கரக:—ஸ. அக.]

கிரகம்—அனுக்கிரகம்[1], நட்சத்திரம்[2], பிசாசு முதலியன[3], நவக்கிரகம்[4], சூரிய சந்திர கிரகணம்[5], போர் எழுச்சி[6], கைக்கொள்ளுகை[7], பூதனை முதலிய பாலக்கிரகம்[8]. [1, 4-8: ஗்ரஹொ ஗்ரஹணெ ... அநு-஗்ரஹெஷு ரணொஷ்ஷ்யொ, உவராமெ வ-தநாஷாவாஷிதஷாஷெள—அ. ஸ. ii, 584. 2: 3: ஗்ரஹஸ்து ..., ...; ..., ... விஶாவாஷெள—நா. ஸ. i, 70.]

கிரகராசன்—சூரியன், சந்திரன். [1, 2: ஗்ரஹராஜ: ஶஶிநஷ்ணெ—அ. ஸ. iv, 54.]

கிரமுகம்—செவ்வுலோத்திரம், பூவரசு, கமுகு. [1, 2: க்ரமுக: —அ. கொ. II, iv, 41. 3: வ-ஙு: க்ரமுக:—அ. கொ. II, iv, 169.]

குரகம்—நீர்முள்ளி, நெருஞ்சி, மஞ்சாடி. [1: க்ஷுரக: — வை. 53, 201. 2: கோக்ஷுரக: — அ. கோ. II, iv, 99. 3: க்ஷுரக: — அ. கோ. II, iv, 40.]

குரரம் — செங்காற் கருமூக்கன்னம், அழுகணிப்பறவை. [1: ஸ்ரோதஸ்யுத்க்ரோசகுரரௌ ஸமௌ — அ. கோ. II, v, 23. 2: குரரோ உத்க்ரோசக:—த்ரி. சே. II, v, 24.]

682. பிரகிருதி யிருதிணைப்பா லியல்புவினைப் பகுதி
பிராணிகா ரணங்குணசா மியமுதன்மை மூலப்
பிரகிருதி நகர்ச்சநமி ராச்சியாங் கந்தாய்
பெண்குறியும் பஞ்சபூ தமுமோர்சந் தசுமாம்
பிரகாஞ்சேர்ந் ததுதிரள்யா மஞ்செறிந்த மலர்நாய்
பெருங்கடுமை யிருகழுதை யகில்பரிச்சந் நாகம்
பிரசண்டம் வெள்ளலரி மிகக்கடுமை யென்ப
பிரபையள காபுரிதீச் சுவாலைகிர ணப்பேர்.

பிரகிருதி—இருதிணைப்பால் இயல்பு[1], வினைப்பகுதி[2], பிராணி[3], காரணம்[4], குணசாமியம்[5], முதன்மை[6], மூலப்பிரகிருதி[7], நகர்ச்சனம்[8], இராச்சியாங்கம்[9], தாய்[10], பெண்குறி[11], பஞ்சபூதம்[12], ஓர் சந்தசு[13]. [1, 5: ப்ரக்ருதி: ...; ... ஸாம்யாவஸ்தா — அ. ஸ. iii, 269, 270. 2: ப்ரக்ருதி: — ஸ. அக. 3, 4, 6, 7, 10, 12: ப்ரக்ருதி: பஞ்சபூதேஷு ...; ப்ராணிகாரணே ... ஜனனீ ... ஸ்த்ரீ—நா. ர. iii, 170, 171. ப்ராதான்யம் முதன்மை, சாங்கிய நூலிற் கூறும் மூலப்பிரகிருதி என்னும் இரண்டு பொருளிலும் வரும். 8, 9: ஸ்வாம்யமாத்யஸுஹ்ருத்கோசராஷ்ட்ரதுர்கபலாநி ச; ராஜ்யாங்காநி ப்ரக்ருதய: பௌராணாம் ச்ரேணயோபி ச — அ. கோ. II, viii, 17, 18. 11, 13: ப்ரக்ருதி: ... யோநௌ ...; ... ச்சந்த:ப்ரபேதே—வி. ப்ர. (தே). த, 167.]

பிரகரம்—சேர்ந்தது[1], திரள்[2], யாமம்[3], செறிந்த மலர்[4], நாய்[5], பெருங்கடுமை[6], இருகழுதை (கழுதை, கோவேறு கழுதை)[7], அகில்[8], குதிரையின் சன்னகம்[9]. [1: ப்ரகர:—ஸ. அக. 2, 4, 8: ப்ரகர: கீர்ணபுஷ்பாதௌ ஸமூஹே ப்ரகரம் புந:; ஜோஷகே — அ. ஸ. iii, 564, 565. 3: த்வௌ யாமப்ரஹரௌ ஸமௌ — அ. கோ. I, iv, 6. 5-7, 9: ப்ரவர: புந:; வேஸரே ஹயஸந்நாஹே குக்குரேऽதிஸூர்ய்யே ச ப்ரவர—அ. ஸ. iii, 563, 564.]

பிரசண்டம்—வெள்ளலரி, மிகக்கடுமை. [1, 2: ப்ரசண்டா உத்ரா ஸ்வேதகரவீரே—வி. ப்ர. ங, 26.]

பிரபை—அளகாபுரி, தீச் சுவாலை, கிரணம். [1: ப்ரபா—ஸ. அக. 2, 3: பாஜ்வலயோ: ப்ரபா—நா. ர. ii, 263.]

683. இரசதம்விண் மீனிரத்தம் வெள்ளைமுத்து மாலை
யானைத்தந் தம்வெள்ளி வெண்மலைபொன் னும்பேர்
இரசநம்பொன் வெள்ளிவிடம் பிசின்பழங்க டாயம்
இலைச்சாறு பல்லொலித்த லுணவொடுநே யமுமாம்
இரசனையோ ரணிவகுப்பு மலராதி தொடுத்தல்
ஈரெட்டுக் கோவையுள பெண்ணரைநூன் மாலை
பிரசவம்பா ரம்பரியப் பிரசங்க மநுச்சை
பிறப்புப்பூக் காய்ப்ராணன் பிள்ளைபிள்ளைப் பேறே.

இரசதம்—நட்சத்திரம்[1], இரத்தம்[2], வெள்ளை[3], முத்துமாலை[4], யானைத்தந்தம்[5], வெள்ளி[6], வெண்மலை[7], பொன்[8]. [1, 5, 6, 8: ரஜதம் ...; ... உடுநி நக்ஷத்ரே ஹாரே—ஸுவர்ணயோ:—நா. ர. iii, 186, 187. 2-4, 7: ரஜத: ...; யுவயோ ஸோணிதே ஹாரே ... ஸ்வேதயோ: — சு. வ. iii, 277, 278. ரஜதாத்ரி கைலாசமலையைக் குறிக்குமாகலின் கோசத்தில் ஸ்வேத மாத்திரம் இருப்பினும் இங்கு வெண்மலை எனப்பட்டது.]

இரசநம்—பொன்[1], வெள்ளி[2], விடம்[3], பிசின்[4], பழம்[5], கடாயம்[6], இலைச்சாறு[7], பல்[8], ஒலித்தல்[9], உணவு[10], நேயம்[11]. [1-4, 6, 7, 9-11: ரஸநம் ஸ்நேஹகஷாயத்ரவவிஷஹேமநிர்யாஸஸ்வரஸாஸு, த்வநி ... நிர்யாஸேஷு—நா. ர. iii, 278. 5: ரஸநம் ... ஃபலே—வே. 262, 136. 8: ரதநா: ... தந்தா:—வே. 180, 176.]

இரசனை — ஓர் அணிவகுப்பு, மலர் முதலியன தொடுத்தல், பதினாறு கோவையுள்ள அரைநூன்மாலை. [1: ரசநா — ஸ. அக. 2: ரசநா ஸம்த்ருப்தி:— சு. கோ. II, vi, 137. 'ஷோடசயஷ்டிரசநா:' என்பது மகேசுவரர் டீகை. 3: ரஸநம் ..., ... காஞ்ச்யாம் ஸ்த்ரீ — நா. ர. iii, 278. 'மேகலை காஞ்சி கலாபம் பருமம், விரிசிகை யேழு மோ ரெட்டுமீ ரெட்டு, மூவாறு நாலெட்டு முறைக்கோவை மணியே' என்னும் திவா. (vii, 57) த்தால் காஞ்சி எண்கோவைமணி யென்று தெரிகிறது. ஆசிரியர்க்கு ரஸநா கலாபே என்று பொருள் கூறும்

மேற்கோள் கிடைத்திருக்கலாம். ரஸநா என்பது ரஸநா வின் வேறு ரூபம். திவா. (vii, 59) மும் 'இரதந மரைஞாண்' என்றது.]

பிரசவம் — பாரம்பரியப் பிரசங்கம்[1], அநுச்சை[2], பிறப்பு[3], பூ[4], காய்[5], பிராணன்[6], பிள்ளை[7], பிள்ளைப்பேறு[8]. [1-8: ப்ரஸவ: ஸந்ததௌ அநுஜ்ஞாயாம் அபத்யோத்பாதநே, பாரம்பர்ய ப்ரஸங்கே ச ப்ராணி- ஜன்மநி சோத்பவே — நா. ர. iii, 425. இதர கோசங்களில் ஜந்மநி சோத்பவே என்று மாத்திரம் இருத்தலால் ப்ராணி என்பது ஆசிரியர்க்குக் கிடைத்த பிரதியில் ப்ராண என்றிருந்தது போலும்.]

684. கரணமுடல் பவாதிகம்யோ காசநமிந் திரியங்
கணிதமிடந் திரிகரண முபகரண மந்தக்
கரணம்நாட் டியகீத பேதம்வியா பாரம்
கலவிகா ரணங்கிரியை சுரதபந்த மும்பேர்
சரணமடைக் கலம்பாதம் வீடுகுல மரவேர்
சஞ்சாரம் பாட்டினோ ரடிகாத்தல் முற்றம்
தரணமீ ரைம்பலப்பொன் றொருகஃசாம் வெள்ளி
தாங்கியந்தாண் டுதல்பாலந் தரித்தல்மூலே யுலகம்.

கரணம்—உடல்[1], பவமுதலிய பதினொரு கரணம்[2], யோகாசனம்[3], இந்திரியம்[4], கணிதம்[5], இடம்[6], திரிகரணம்[7], உபகரணம்[8], அந்தக்கரணம்[9], நாட்டிய கீதபேதம்[10], வியாபாரம்[11], கலவி[12], காரணம்[13], கிரியை[14], சுரதபந்தம்[15]. [1-4, 6, 11: கரணம் க்ஷேத்ரகாத்ரயோ:, ...; ... யோகிநா- மாஸநாதிஷு, ஹ்ருஷீகே ... பவாதௌ ச க்ருதாவபி — ஸ. ஸ. iii, 184, 185. 5, 8, 10: ஸாதநே கீதந்ருத்யப்ரபேதே காயஸ்த கர்மணி; கரணீ—த்ரி. சே. III, iii, 122, 123. 7: திரிகரணம் மனம்வாக்குக்காயம் — அக. 9: கரணீ — ஸ. அக. அந்த:கரணீ மனம். அந்தக்கரணம் மனம், புத்தி, சித்தம், அகங்காரமென நான்கு — சிவஞானபோதம், iv, 12: திவா. xi, 263. 13, 15: கரணம் ... காரணே ... ரதபந்தே — நா. ர. iii, 134. நா. ஸ. த்திலும் ரதபந்தே என்றிருக்கிறது. ஆயினும் கரணீ என்பது ஸ. அக. யில் புணர்ச்சிவகை என்னும் பொருளோடு காணப்படு கிறது. ஸுரதபந்தீ என்பது அதுவே. ஸ. கோ. III, iii, 54, மகேசுவரர் டீகையில் காட்டப்பட்ட அஜயகோச மேற்கோளில் ஸுதபந்தே என் றுள்ளது. 14: கரணீ சமயக்கிரியை—ஸ. அக. கரணம் ..., ... க்ரியா- யாம் ... —வி. ப்ர. ண, 34.]

**சரணம்** — அடைக்கலம்[1], பாதம்[2], வீடு[3], குலம்[4], மரவேர்[5], சஞ்சாரம்[6], பாட்டின் ஓர் அடி[7], காத்தல்[8], முற்றம்[9]. [1, 3, 8: ஶரணம் ... ரக்ஷித்ரோ: ஶரணம் ரக்ஷணே க்ருஹே — வி. ப்ர. ண, 37. ரக்ஷித்ரு அடைக்கலம். 2, 4-6, 9: ஸஞ்சாரே சரணம் ... ப்ராஜ்ஞே ததா, ... மூலே கோத்ரே வதே — நா. ர. iii, 137. 7: சரணம் — ஸ. அக.]

**தரணம்**—பத்துப்பலப் பொன்[1], ஒரு கஃசு வெள்ளி[2], தானியம்[3], தாண்டுதல்[4], பாலம்[5], தரித்தல்[6], மூலை[7], உலகம்[8]. [1, 3, 6-8: தரண: ... லோகே ஸேதௌ தாந்யே ...; தரணம் தாரணே மாநவிஶேஷே — ஶ. ஸ. iii, 198, 199. 2: தரணம் — ஸ. அக. ஒரு கர்ஷ எடையுள்ள வெள்ளி. கர்ஷ: காற்பலம். 4: தரணம் — ஸ. அக. 5: தரண: — ஸ. அக.]

685. வரணமா விலிங்குபிரா காரம்வே லியுமாம்
வரனயனிந் திரன்சிவன்சி ரேட்டன்விடன் மணாளன்
பரதங்கூத் தின்விகற்பம் நடநூலோர் கண்டம்
பரனெனலந் நியன்பகைவன் பரமான்மாப் பரமன்
இரதமொற் றுமைபுணர்ச்சி கா லுடல்வா கனம்பல்
லெழுதுதல்தேர் வஞ்சிமர மநுராக மொலிவெள்
ளிரதம்நீர் சாறுமிழ்நீர் விடம்பிசின்பொன் புளிநீர்
இந்திரியம் வலிசிங்கா ராதிமது ராதி.

**வரணம்**—மாவிலிங்கு, பிராகாரம், வேலி. [1-3: வரணோ வர-ணத்ருமே; ப்ராகாரே வரணம் வ்ருதௌ — ஶ. ஸ. iii, 214, 215.]

**வரன்**—பிரமன், இந்திரன், சிவன், சிரேட்டன், விடன், மணாளன். [1, 3: சூடா. xi, ச, 13. 2: 4-6: வர: ...; விடே ஜாமாதரி ஶ்ரேஷ்டே — ஶ. ஸ. ii, 439, 440.]

**பரதம்** — கூத்தின் விகற்பம், நடநூல், ஓர் கண்டம். [1: திவா. ix, 230. 2: பரதோ நாட்யஶாஸ்த்ரே — மே. த, 137. 3: பரதம் — ஸ. அக. ‘பாதவர்ஷம்’. இதினொரு பகுதி ‘பாதகண்டம்’.]

**பரன்** — அந்நியன், பகைவன், பரமான்மா, சிவன். [1, 2: பர: ... அந்யே ... ஶத்ருஷு — ஶ. ஸ. ii, 425. 3: பர: ..., ... பர-மாத்மா ச — நா. ர. ii, 354. 4: நா. தீ. நி. 11.]

இரதம்—ஒற்றுமை[1], புணர்ச்சி[2], கால்[3], உடல்[4], வாகனம்[5], பல்[6], எழுதுதல்[7], தேர்[8], வஞ்சிமரம்[9], அநுராகம்[10], ஒலி[11], பாதரசம்[12], நீர்[13], சாறு[14], உமிழ்நீர்[15], விடம்[16], பிசின்[17], பொன்[18], புளிநீர்[19], இந்திரியம்[20], வலி[21], சிங்கார முதலிய நவரசம்[22], மதுர முதலிய சுவை[23]. [1: 2: ஐக்யே-உரஂ ... ரஹஸ்ய — க. கொ. II, vii, 57. 3, 4, 8, 9: ரயஸ்த்ய ஸ்ரந்தனெ வாஹெ ஶரீரெ வெதஸஹ்ருமெஷ — க. ஸ. ii, 217. 5: ரய: —ஸ. அக. 6, 7: ரஷெள உஹெந்த விலெவனெ—நா. ர. ii, 208. 10, 13, 14, 16, 21, 22: ரஸ: ... ஜலெ வீர்ய ஶ்ருங்காராதௌ விஷெ த்ரவெ; ... ராமெ — க. ஸ. ii, 573, 574. ராஸெராஸ்டனரக்தி: என்பது மகேந்திரர் டீகை. 11, 12, 15, 17, 18, 20, 23: ஐயாராஷ்ஸவர்ண-ரெஷெதாநிரஸ்ராஸ ... வாரஷெஷ்ய, ... ஞ்லி ... ரஸாஸ்வாதய-ஷ்லெஷ்ட ரஸ: — நா. ர. ii, 472. 19: ரஸ: —ஸ. அக.]

686. பரதனிரா மனுசன்வேட் டுவன்கூத்த னடநூற்
பணித்தோன்சா குந்தலை யன்றந்து வாயன்
பிரதிகா ரம்பிறிது செயல்சிகிற்சை திருப்பல்
பிரயோக முதாரணங்கூட் டுகையேவல் கருமம்
பிரதிசரங் கரசூத்ரம் கங்கணமோர் மந்த்ரம்
பின்படைபூ டணமாலை விரணசுத்தி யென்ப
கரபமணிக் கட்டுழுதற் கசிட்டிகைமட் டுள்ள
கையோர மொட்டகத்தின் குட்டிகழு தையுமாம்.

பரதன்—இராமன் தம்பி, வேட்டுவன், கூத்தன், நடநூலியற்றியோன், சகுந்தலை மகன், நெய்வோன். [1-6: ஹரத: ஶலெர ராமாநுஜெ ..., உஷ்ஷ்நிஜெ நடெ நாட்யஶாஸ்த்ரக்ருத்தந்துவாயயொ: — நா. ர. iii, 166.]

பிரதிகாரம்—பிறிதுசெயல், சிகிற்சை, திருப்பல். [1: வெர-ஶுத்தி: ப்ரதீகாரோ வெரநிர்யாதநஂ வ ஸா — க. கொ. II, viii, 110. 2: ப்ரதீகாரே ப்ரதிக்ரிதி: — த்ரி. ஶெ. III, iii, 164. 'ப்ரதீகார: வெரநிர்யாதநெ க்ருதஸ்யாவகாரஸ்ய தத்ஸ்ரஶ-வாவகாரகரணெந ஶோதநெ, ஶோதெஷ்விஸ்த்தாயாஂ வா' என்பது வியாக்கியை. 3: ப்ரதிகார: —ஸ. அக.]

பிரயோகம் — உதாரணம், கூட்டுகை, ஏவல், கருமம். [1-3: ப்ரயொமஸ்த நிதர்ஶநெ, காரணெ வ ப்ரயத்கெள வ — க. ஸ. iii, 117. 4: ப்ரயொமொ யஜ்ஞாதிதந்த்ரெ—நா. ர. iii, 71.]

*பிரதிசரம்*—காரசூத்திரம்[1], கங்கணம்[2], ஓர் மந்திரம்[3], பின்படை[4], பூடணம்[5], மாலை[6], விரணசுத்தி[7]. [1: कौतुकं प्रतिसरं हस्तसूत्रे — வி. ப்ர. ர, 232. 2·7: प्रतिसरस्तु मन्त्रभेदे ..., मण्डने व्रणशुद्धौ ... सैन्यपृष्ठे स्रजि; कङ्कणे — ந. ஸ. iv, 266, 267.]

*கரபம்* — மணிக்கட்டுமுதற் சிறுவிரல்வரை யுள்ள கையோரம், ஒட்டகத்தின் குட்டி, கழுதை. [1: मणिबन्धादाकनिष्ठं करस्य करभो बहिः—அ. கோ. II, vi, 81. 2: उष्ट्रे क्रमेलकमयमहाङ्गाः करभः शिशुः—அ. கோ. II, ix, 75. 3: அக. चक्रीवन्तस्तु वालेया रासभा गर्दभाः खराः—அ. கோ. II, ix, 77.]

687. பிரபவமுந் தியஞானத் திணுக்கிடம்விக் கிரமம்
பிறப்பினுக்குக் காரணநீ ரினுக்குமூ லமுமாம்
குரவகஞ்செங் குறிஞ்சிசெவ்வா டாமலரென் றிருபேர்
குரவைகைகோத் தாடல்முந்நீர் மள்ளியர்வா யொலிப்பாம்
இரலையச்சு வதிபுல்வாய் கலையூது கொம்பாம்
இரவணமொட் டகங்கழுதை யொலித்தல்வண்டு மேற்கும்
பிரவணமொற் றுமையடைவிற் றாழ்ந்ததிலம் வணக்கம்
பிரவணன்றான் வணக்கமுளோன் சமர்த்தனொருப்
பட்டோன்.

*பிரபவம்*— முந்திய ஞானத்துக்கு இடம், விக்கிரமம், பிறப்புக்குக் காரணம், நீருக்கு மூலம். [1, 3: स्याज्जन्महेतुः प्रभवः स्थानं चाद्योपलब्धये—அ. கோ. III, iii, 209. 'ज्ञातुराद्योपलब्धये प्रत्यक्षज्ञानाय यत्स्थानम्' என்பது மகேசுவரர் டீகை. ज्ञानस्य चादिमस्थाने என்பது மே. (வ, 41.) யிலுள்ளபடி. 2: प्रभवः ... पराक्रमे — மே. வ, 41. 4: प्रभवो ऽम्बुमूलदेशवाः—ஶா. கோ. 145.]

*குரவகம்* — செங்குறிஞ்சி, செவ்வாடாமலர். [1: कुरबकः — அ. கோ. II, iv, 75. 2: कुरवकः — அ. கோ. II, iv, 74.]

*குரவை*—கைகோத்தாடல், கடல், மள்ளியர் வாயொலிப்பு. [1, 2: பிங். x, 369. 3: அக. வழக்கு?]

*இரலை* — அச்சுவதி நட்சத்திரம், புல்வாய், கலை, ஊதுகொம்பு. [1-4: திவா. xi, 34.]

